# செந்தமிழ்ச் செல்வி



## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

ஏழாவது பரல்



சிலம்பு-ரு௦] வள்ளுவர் ஆண்டு உ௦௦௭, மாசி (Mar '76) [பரல்-௭

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

# உள்ளுறை



---

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௦ | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦௭, மாசி மார்ச் 1976 | பரல் ௭ |
|---|---|---|

# அடிகளார் செயல்கள் அனைத்திலும் கலைக்கவின் மிளிர்ந்தின்பூட்டுதலைக் காண்போம்

உண்பது, உறங்குவது, உலாவுவது, நூல்களை வாங்கிப் பேணிக் காப்பது, அவற்றைப் படிப்பது, மாணவர்கட்குப் பாடஞ் சொல்வது, அவைகளில் எழுந்து நின்று சொற்பொழிவாற்றுவது; அன்பர்களோடு உரையாடுவது, வேண்டுவார்க்குச் சான்றிதழ், நூல்கட்கு மதிப்புரை, நாட்குறிப்பு கடிதங்கள் வரைவது, தம் மாணவர்களின் கையெழுத்துப்படிகளைத் திருத்துவது, தாமே முன்னின்று பேரவைகள் நடத்துவது, வெளியூர்கட்குப் பயணஞ் செய்வது, தம பொருள்களையெல்லாம் துப்புரவாக ஒழுங்குபெற உரிய இடங்களில் வைப்பது ஆகியவற்றிலெல்லாம் அடிகளாரிடம் கலைக்கவின் ஒளிபெற்றுத் திகழ்ந்தின்புறுத்துவதைக் காணலாம்.

காலையில் அடிகளார் படுக்கையினின்றும் இறை நினைவோடு எழுந்திருந்து தமது தோட்டத்திலே உலாவுவது மயில் மெல்ல நடப்பதைக் கண்டு களிப்புறுவதுபோலிருக்கும்.

உண்ணும்போது கறிவகைகள் ஒவ்வொன்றையும் மென்று சுவைபார்த்து உண்பார்கள். சிறிது உப்போ, புளியோ மிகுந்திருப்பதையும் சுட்டிக் காட்டுவார். அடிகளார் திருமகளாரும் என் அருமை அண்ணியாருமாகிய தனித்தமிழ்த் திருவாட்டி நீலாம்பிகையார் அடிகளார்க்குச் சுவைமிக்க உணவினை ஆக்கி உண்பித்து மகிழ்ச்சியூட்டி அடிகளாரிடம் இலக்கண இலக்கியங்களைப் பாடங்கேட்பதுண்டு. அம்மையார் எழுதிய நூல்களின் கையெழுத்துப் படிகள் அடிகளார் திருத்தத்துடன் அச்சுக்

கோப்பதற்குக் கழகத்துக்கு வருவதுண்டு. அடிகளார் செய் திருக்கும் திருத்தங்கள் கவர்ச்சியுடையனவாகவும் அழகுக்கழகு ஊட்டுவனவாகவு மிருக்கும். வேறு படி செய்யாமலே அச்சுக் கோப்பதற்கேற்றவாறு திருத்தங்கள் அமைந்திருக்கும். அஃதும் ஒரு கலையாகும்.

அடிகளார் தமது ஆராய்ச்சிக்குத் தாமே விலைகொடுத்து வாங்கிய தமிழ், ஆங்கிலம், சமற்கிருதம் ஆகிய மொழிகளி லுள்ள நூல்கள் அனைத்தும் மேலுறை இடப்பெற்றிருக்கும். ஒரு நூலை வாங்கியவுடன் அதன் உள்முகப்பில் தமது பெயரை ஆங்கிலத்திலோ தமிழிலோ எழுதுவதுடன் நாளையும் குறிப்பர். ஆங்கில நூல்கள் சிலவற்றில் தாள்கள் விளிம்பு அறுக்கப்படாம லிருக்கும். பகலுணவிற்குப் பின் அடிகளார் சிறிது நேரம் நாற்காலியில் அமர்ந்து அந் நூல்களின் விளிம்பு மடிப்புகளை அறுத்து மேலுறை இட்டு அவற்றைப் படித்து முடிக்கும்வரை மேசைமேல் வைத்திருப்பர். படித்து முடித்தபின் கண்ணாடிக் கதவுள்ள நிலைப்பேழையில் வைப்பர். ஒவ்வொரு பேழையி லுள்ள தட்டு ஒவ்வொன்றிலும் முன்னும் பின்னுமாக இரு வரிசைகளில் நூல்கள் வைக்கப்பெறும். இன்ன பேழையில் இன்ன தட்டில் இன்ன வரிசையில் தாம் படித்த இன்ன இன்ன நூல்கள் இருக்கும் என்பது அவர்கள் நினைவிலிருக்கும். இந்த முறையில் அடிகளார் தொகுத்த நாலாயிரம் வரையுள்ள நூல்களை 11 பேழைகளில் அடுக்கி வைத்திருந்தனர். அவற்றில் 3 பேழைகள் முன்பக்கமும் பின்பக்கமும் கண்ணாடிக் கதவுகள் அமைக்கப்பெற்றனவாகும். அவற்றிலுள்ள நூல்கள் யாவும் அடிகளாராலேயே தூசு துடைத்து வைக்கப்படுவதுண்டு. அதனால் நூல்கள் யாவும் அன்று வாங்கப்பட்டதுபோலிருக்கும். அவற்றில் எதையும் பிறரைக் கொண்டு செய்விக்க விரும்பார்கள். பிறர் நூல்களை இடம் மாற்றுமலோ ஒழுங்கான முறையிலோ வைக்கமாட்டார்கள் என்பது பற்றியே அங்ஙனம் செய்தனர்.

கடிதங்கள் :

அடிகளார் எழுதும் கடிதங்கள் அஞ்சலட்டைகளிலும் கடிதத் தாள்களிலும் இருக்கும். அவர்கள் தம் மாணவர்கட்கும் அன்பர்கட்கும் அறிஞர்கட்கும் எழுதிய கடிதங்களில் ஏறக் குறைய 500 க்கு மேற்பட்டவற்றைக் கழகம் தொகுத்து வைத் திருக்கிறது. கடிதங்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டு விழுக்காடு அடிகளார் தம் கைப்படவே எழுதியனவாக இருக்கும். ஒரு கடிதத்தாளில் எழுதக்கூடிய நிரம்பிய செய்திகளை ஓர் அஞ்சலட்டையில் பொடி எழுத்தாகவும் துலக்கமாகவும் எழுதுவர். அடிகளார் கடிதங்களில் எழுத்தும் பொருளும்

அழகும் பொலிவுந் தருவனவாக இருந்ததால் அவற்றைப் பெற்ற வர்களில் பெரும்பான்மையோர் பேணிக் காத்து வைத்திருந் தனர். சிலர் எங்ஙனமோ கைந்நழுவ விட்டுவிட்டனர். அங்ஙனம் பேணி வைத்திருந்தவர்களிடமுள்ளவற்றைக் கழகம் வாங்கித் தொகுத்து வைத்துள்ளது. அடிகள் தமக்கு வரப் பெற்ற கடிதங்கட்குக் கூடுமானவரை உடனுக்குடன் மறுமொழி எழுதுவர். மயிலம் தமிழ்க் கல்லூரி மாணவர் முத்து தரும லிங்கம் என்பவர் தமது பெயருக்குத் தூய தமிழ்ப்பெயர் அமைக்க விரும்பி அடிகளார்க்கு எழுதிக் கேட்கவே அடிகளார் 11—7—41இல் எழுதிய அஞ்சலட்டை வருமாறு :

"தருமலிங்கம் என்பதற்கு நேர் தமிழ் 'அறக்குறி' என்ப தாகும். அதைவிட அக்கருத்தடங்கிய 'அறவணன்', 'அறமகன்', 'அறமைந்தன்', 'அறவோன்' என்பவற்றில் ஒன்றைப் பெயராக அமைத்துக்கோடல் நன்று".

அடிகளார் தம் அணுக்கத் தொண்டர் திரு அ. கனக ராயர்க்கு 24—4—1939 இல் எழுதிய கடிதத்தில் கண்ட செய்தி யும் அறிந்து மகிழ்தற்குரியது. அது வருமாறு :

"அட்டையில் எழுதுவதாய் இருந்தால்மட்டும் ஆங்கிலத்தில் எழுதுவேன். உறைக்குள் எழுதும் கடிதமாய் இருந்தால் பிறர் பாரார் ஆதலின் தமிழில் எழுதுவேன். யான் தமிழில் எழுதும் ஒவ்வொரு சொல்லையும் சொற்றொடரையும் தாங்கள் உன்னிப் பாகக் கவனித்து வந்தால் தமிழில் பிழையின்றிப் பேசவும் எழுத வும் ஆற்றல் பெறுவீர்கள்."

சான்றிதழ்கள் :

அடிகளார் டாக்டர் மா. இராசமாணிக்கம் பிள்ளை, மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர், பச்சையப்பன் கல்லூரித் துணைத்தமிழ்ப் பேராசிரியர் ஏ. ஆர். முத்தையா ஆகியோர்க்கு ஆங்கிலத்திலும் திருவையாறு சித்திரகவி அப்துல் கபூர் சாகிபு அவர்கட்குத் தமிழிலும் சான்றிதழ்கள் வழங்கியுள்ளனர்.

வெளியூர்கட்குப் பயணம் செய்யும்போது காலந் தவறாமல் செல்வதுடன், உடன் எடுத்துப்போகும் பொருள்களை வழியில் இழந்து விடாமல் பாதுகாப்பதில் மிகவும் கருத்தாய் இருப் பார்கள். அடிகளார் அவைகளில் எழுந்து நின்று சொற் பொழிவாற்றுவதும், சொற்பொழிவின் முடிவில் தாம் கூறிய பொருள்களை முறையே சுருக்கிக் கூறுவதும் அவர்கட்கே உரிய தனிப் பண்பினை விளக்கும். இங்ஙனமெல்லாம் அவர்கள் தமது வாழ்க்கையினைக் கலையாகவே அமைத்துப் புகழ்பெற்றவராவர்.

—வ. சு.

———



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

மாணவர், திருக்குறள் பீடம் குருகுலம்
அழகரடிகள் (இளவழகனார்)

## 7. கலைக் கவின்

அடிகளாரின் கலைப் பெருமைகளை இப்பகுதியிற் சிறிது எண்ணிப் பார்க்கலாம். அவர்கள் எழுத்து, பேச்சு, வாழ்க்கை அனைத்தும் கலைக் கோலங்கள்; கலை வடிவே அடிகளார் என்று கூறிவிடலாம்.

கலை என்பது கல்வியினால் உண்டாவது; பயன்படுந் தொழிலுக்கும் கல்விக்கும் முன் நிலை; கலையழகு பெருமல் யாரும் தொழிற் சிறப்பை அடைய முடியாது; அருளையும் எய்த முடியாது; உலக நிலைக்கும் அருள் நிலைக்கும் இடைப்பட்டது கலை; உலக நிலையிலிருந்து அருள் நிலைக்கு ஏற, ஏணியாய் உதவுவது கலை; சேவை காரணமாக உலகத்தின் தொழில் வகைகளுக்கும் அது உதவும்; அடிப்படை மெய்யருளுக்கும் ஏற்றி நலஞ் செய்யும்.

கல்வி வேறு, கலை வேறு; இயற்கையை ஆழ்ந்து ஆழ்ந்து கற்பது கல்வி; அதறகு மொழி உதவும்; ஆழ்ந்து கற்பதனால், ஓர் அறிவாற்றல் அரும்பிப் பெருகியபின், அது கனிந்து அன்பாய் ஒளிர்கிறது; அந்தக் கனிவுதான் 'கலை' என்பது! கனியும் இயல்பு எங்கெங்கே அமைகிறதோ, அங்கெல்லாம் கலைகள் காணப்படும். உயிரில் அறிவு என்பது காய்; அன்பு என்பது பழம்; அறிவு பழுத்து அன்பாவதற்கு உதவும் அருளாற்றலே கனியும் இயல்பாகிய கலை!

> "காயெலாம் கனி எனக் கனிவிக்கும் ஒரு பெருங்
> கருணை யமுதே"

என்று இவ்வுண்மையை இராமலிங்க அடிகளார் நன்கு விளக்கினர்; (திருவருட்பா : நடராசபதி மாலை, 31).

> "கலைவளர் கலையே, கலையினுட் கலையே
> கலையெலாம் தரும் ஒரு கருவே"

என்று, மேலும் (பொது நடம், 18) அவர் போற்றுவார்!

கலை என்பது அறிவன்று அன்பும் அன்று; அஃது ஓர் ஆற்றல்! யாருக்காவது நாம் 'அறிவும் ஆற்றலும் வாய்ந்த

ஐயா' என்று கடிதம் எழுதுகிறோம்; அதில் வரும் 'அறிவு' என்பதுதான், கல்வி; ஆற்றல் என்பதுதான் கலை! இதனை அழகு என்றும் கூறுவதுண்டு; ஆயினும் 'அழகு வடிவம்' அமைவதற்கு உதவியாயிருப்பது ஆற்றல்! ஆற்றல் அரும்பி மலர்ந்தால் எதுவும் அறிவின் வழி அன்பும் அழகும் பெறும்; உண்மையின் மலர்ச்சியுங் கனிவுமே 'ஆற்றல்' என்னுங் கலை! உண்மை என்பது இறையுண்மை; அது பொருள்களில் அழகாய், உயிர்களில் அன்பாய்த், தனது ஆற்றலைச் சிந்துகின்றது! எல்லாம் கைபுனைந்தியற்றுக் கலைக் கவின் பெறுகின்றன!

இத் தெய்வ ஆற்றல், மொழி மூலம் வெளிப்பட்டால், 'மொழிக் கலை' ஆகின்றது; செய்யுள் அல்லது உரைநடை மூலம் விளங்கினால் 'இலக்கியக் கலை' ஆகும்; பேச்சு மூலம் சுடர் விட்டால் 'பேச்சுக் கலை' எனப்படும். பல தலையான கருத்துக்கள் வாயிலாக ஒளி வீசினால், கணக்கியல், பொருளியல், மனவியல், உயிரியல், அறிவியல் முதலிய கல்விகளாய்ப், பின்பு உணர்வு மிகுந்து சேவையில் மிளிரும் கலைகளாய்த் தோற்றும்; உலகத்திற் காணப்படுகின்ற அழகு கோலங்களெல்லாம் இக் கலையாற்றலால் அமைவனவே; இதனைச் 'சுவை' என்று சொல்லிவிடலாமோ என்றால், அதுவுமன்று; ஆற்றல் அமைந்த பின்பே எதுவும் சுவை தரும்; பழம் வேறு, அதன் சாறு வேறு, சுவை வேறு! காய்கள் பழுக்கவும், சாறு நிரம்பவும், சுவை தரவும் செய்யும் ஆற்றல் வேறு! பொருள்களின் மூலமாகவும் உயிர்களின் மூலமாகவும் அரும்பி மலர்ந்து கனிந்து நிற்கும் தெய்வ ஆற்றலே கலை என்க.

இனி, இந்த ஆற்றலைத் 'திருவருள்' என்றுதான் துணியலாமோ எனின், அவ்வாறும் அன்று; இறைவன் நமக்குத் தந்தை போன்றவர்; 'திருவருள்' என்னும் அம்மை, தாய் போன்றவர்; தந்தையின் ஆற்றல் வேறு, தாயின் ஆற்றல் வேறு; இரண்டும் ஒன்றல்ல; வாழ்க்கையில் நாம் அதனை அறிவோம்; தந்தையின் ஆற்றல் உரிமையின் வல்லமை, தாயின் ஆற்றல் உரிமைக்கு அணைக்கும் வல்லமை; உரிமை என்பது உண்மை நிலை; அதற்கு மக்களைக் கொண்டுவரப் பதஞ் செய்யும் வல்லமையே அணைக்கும் வல்லமை! கருத்துடைய தலைவர் வேறு, அதனை விரிவுரைகளாலும் எழுத்துக்களாலும் பரவச் செய்யும் தொண்டர்கள் வேறு; இருவரும் ஒருவராகார்; ஆனால், இருவரும் ஒருமை யுடையவர்; ஓரிடத்தவர்; ஒரு கோலத்தவர்; பொதுவாக ஒத்தவர் என்று சொல்லிவிடலாம். ஆண் பெண்ணும், கணவன் மனைவியும், தாய் தந்தையும், அம்மை யப்பராகிய இக் கடவுள் ஆற்றல்களுக்கு உரியவர்;

ஒன்று உரிமையியல், அதாவது உண்மை யியல்; மற்றொன்று அதனை ஒளி விளக்கும் அழகியல்; 'Beautiful, the servant of the True' என்பது Shakespeare-ல் வரும் ஒரு பொன் மொழி, p. 243.

சேக்கிழார் பெருமான் இவ் விருவேறு வகையான அம்மை யப்பர் ஒருமைப்பாட்டை இனிது விளக்கும் பொருட்டே, சீகாழி வீதியில் சம்பந்தரும் அப்பரும் ஒருமையுந்றுத் திருக் கோயிலுக்குச் செல்லுவதை,

*"இருட்கடு உண்டவர் அருளும், உலக மெல்லாம்*
*ஈன்றாள்தன் திருவருளும் எனவும் கூடித்*
*தெருட்கலை ஞானக்கன்றும், அரசும் சென்று*
*செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தா ரன்றே"*
*(திருத்தொண். திருநாவுக். 185).*

என்று திருவாய் மலர்ந்தார். 'சிவபிரான் அருள்வேறு, அம்மையின் அருள்வேறு; ஆயினும் அவை ஒருமை யுடையவை' என்பது இதன் கருத்து.

உண்மையின் ஆற்றலாகிய ஆண்டவன் வல்லமை, திருவருள் வல்லமையாகிய அணைப்பின் மூலம் உயிர்களின் அறிவு நிலையிற் கலந்து அன்பு சிறந்து ஏனைப் பொருள்களிலும் பாய்ந்து சேவைத் தொழிலாய்த், தொண்டாய் விளங்கி, எதிரற்ற பேராற்றலாய் இங்ஙனம் எல்லாவற்றிலும் பிறங்கு கின்றது! இவ்வாற்றலே 'தமிழ்க் கலை' என்பது! 'வாழ்க்கைக் கலை' என்பதும் இது! உலகியற்கையின் மூலமாகவும், அவ் வியற்கையைப் பிழிந்து விளக்கும் சான்றோர் நூல் மொழிகளின் மூலமாகவும், இக் கலையாற்றல் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது. அதில் திளைப்பவரே, ஏனையோர்க்கு அவ்வாற்றலால் உண்மையை விளக்குவோரே, கலைஞராவர்! இயல் மொழி யிலும், இசைக் குரலிலும், நாடக மெய்ப்பாடுகளிலும் முத்தமிழ் வடிவில், இக் கலைஞர், வாழ்க்கை விளக்கம் தருகின்றனர்! அறம் பொருள் இன்பம் என்னும் முப்பொருள் முறையில், அங்ஙனம் வாழ்க்கை மறை வழங்கி உதவியவர் திருவள்ளுவர்! மறை நூல் அருளியவராதலின் தமிழகத்துக்கு அவர் முதற் கலைஞர்! முப்பொருட் கலை வாயிலாக வீடுபேற்றியல்பும் விளக் குதலின், இவர் அருளாளருமாவார். ஏனென்றால், கலை யேணியின் மூலம், பொருள்நிலையிலிருந்து அருள் நிலைக்கு மக்களை அவர் முன்னேற்றுகின்றார்! அதனால் அவர் நாற் பொருள் உறுதியுந் தேற்றுங் குரவருமாகின்றார்!

அத்தகைய பெருங் குரவரே இருபதாம் நூற்றாண்டின் கலைக்கவின் செல்வர் மறைமலை யடிகளார்! அலைமகளாகிய

'திருமகள்' என்பது, அறவழியில் வரும் நற்செல்வம்! 'கலைமகள்' என்பது அப் பொருட் செல்வத்தி லிருந்து அருட் செல்வத்துக்கு ஏற்றும் நற்படிகள் வாய்ந்த பலவகையான கலை யாற்றல்கள்! 'மலை மகள்' என்னும் உமையம்மை, மெய்ஞ் ஞானம் எனப்படும் மெய்யுணர்வுப் பேறு! பொருள் என்பது, கலையையும் ஞானத்தையும் தரும்; ஆனல், ஞானம் என்னும் அறமே, அவ்விரண்டையும் கடந்து நாலாவது நிலைபேற்றுறுதி யாகிய வீடு கூட்டும். கலைமகள், இவ்வாற்ருல், 'இன்பம்' ஆகின்ருர்; திருமகள், பொருளும்; மலைமகள், அருளும் ஆகின்றனர். இம் மூவராலும் (மூன்ருலும்) எய்தத் தகுந்த பயன் வீடுபேறு; இதனைப் பயப்பவர் எல்லாம் வல்ல கடவுள்; 'அறம்' என்னும் ஞானமே (மெய்யுணர்வே, பலரையுந் தழுவிச் செல்லும் வாழ்க்கை யியலே) அம்மையாகிய மலைமகளாதலின், அவரோடு அணுக்கமாய்ப் பாகங் கொண்டவராய் அவர் விளங்குவார்; அடிகளார் வாழ்க்கையில், திருமகள் கலைமகள் மலைமகள் மூவரும் ஒற்றுமையாய் ஒருங்கு குலவி யிருந்தனர்; தத்தம் நற்பயன்களை விளைத்து அவை விளங்கிப் பயன்படுமாறு மிளிர்ந்துகொண் டிருந்தனர். பொருள்களின் மூலம் கலை யாற்றல் வீறிக்கொண் டிருந்தன; அவ்வாற்றலின் மூலம் மெய் யுணர்வு மிதந்து கொண்டிருந்தது!

அடிகளார் 'பொதுநிலைக் கழக' மாளிகை, தெரு வீடுகள் பலவற்றினும் பெரியது; ஓராண்டில், திருடர் சிலர், வேறு வீடு ஒன்றிற் புகுந்து கொள்ளை யடித்தனர்; அடிகளார் மாளிகைக்கு வரவில்லை; 'திருடர்க்கு இங்கே ஏதும் அகப்படாதே' என்று அடிகளார் அப்போது தெரிவித்தார்கள். அது முற்றிலும உண்மை; காரணம், பொருள் வளமெல்லாம், கலை வளமாக, ஞான வளமாக அங்கே விளங்கிக்கொண் டிருந்தன; அவ்வப் போதும் வரும் வருவாய்கள் கலை நூல்களாக, கலைஞான நூல் களாக மாறிக் கொண்டிருந்தன; அடிகளார் வாழ்வு எளிய வாழ்வு! செல்வர் பலர்க்கும் ஈது எடுத்துக் காட்டு.

நூல்களை மன மகிழ்ச்சியோடு விலைகொடுத்து வாங்குவதில் அடிகளார் பேருக்கம் கொண்டவர்; 30-8-1913-ல் கொழும்பு அன்பர் ஒருவர்க்கு எழுதிய கடிதத்தில், "James caston புத்தகத்திற்கு London L. N. Fowler & Co.-க்கு எழுதிக் கேளுங்கள்" என்று குறித்திருப்பது இங்கு நினைவு கூர்தற் குரியது; உலக நாடுகளிலிருந்தெல்லாம் அவர்கள் பெயர்க்கு நூல்கள் வரும்; வேண்டுவன தேர்ந்தெடுத்துக் கொள்வார்; மற்றவை, திருப்பி அனுப்பப்பட்டு விடும்; உலக நாடுகளிலும் விற்பனை நிலையங்களிலும் அடிகளாரிடத்தில் அவ்வளவு

நம்பிக்கை; புதியவாக நூல்கள் வெளிவந்தனவென்றால், மறு கிழமையே அவை அடிகளார் மேசைமேல் இருக்கும்; பொது நிலைக் கழகத்தில், 'மணிமொழி நூல்நிலையம்' அவ்வாறு பேரளவில், தகுதிச் சிறப்பில், அமைக்கப்பட்டு வந்தது. எல்லாருடைய வீடுகளிலும் நூல்நிலையங்கள் இவ்வாறு அமைந்துவந்தால், நாடு எவ்வளவு வீறு பெற்றிருக்கும்! நாட்டவரிற் பெரும்பாலார், கலை விளக்கம் உடையவராயிருந் தால், இடர்க்கு இடமேது?

அடிகளார் நூல் நிலையந்தான் இப்போது சென்னை இலிங்கி செட்டித்தெருவில், மல்லீசர் திருக்கோவிலுக்கருகில், வள்ளலார் திருவருள் மாளிகையில் 'மறைமலையடிகள் நூல்நிலையம்' என்னும் மாட்சிமைப் பெயரில் அமைந்து, சைவ சித்தாந்தக் கழகத்தாரால் தக்க கலை நிலையமாகப் போற்றப்பட்டு வருகிறது. அதன்றலை, ஆன்றவிந்தடங்கிய சான்றோர் பலரும், அவ்வப் போதும் வந்து பயன் கொள்கின்றனர்! பயன் கொள்ளும்படி தகுதி வாய்ந்த நூல்கள் மிகுந்து, புலவர் படங்களுடன் அவ்வளவு சிறப்பாய் நூல்நிலையம் திகழ்கிறது! நடத்துவோர் நோக்கமும் திறமும் அத்தகையன!

மெய்யுணர்வினர், அம் மெய்யுணர்வைத் தம் மனத்தால் வாக்கால் எழுத்தால் பிறரையும் முன்னேற்ற முடியும்; மன வாக்குக் காயங்களில் மெய்ப்பொருளின் ஆற்றல் கலந்து வெளிப் படும்போதுதான், அது 'கலை' என்று பெயர் பெறுகிறது; மனம் முதலிய அகக்கருவிகள் மூலம், அங்கங்கும் மெய் கண்டு, மெய்யைத் தேனிக்கும்போது அதனை 'யோகக் கலை' என்ப; வாக்கால் வெளிப்படும்போது 'மொழிக் கலை' ஆகின்றது; செயலில் வரும்போது 'தொழிற் கலை' யாய்ச் சிறக்கின்றது! மூன்றிலும் கலைஞர் அடிகளார்;

மெய்ப்பொருட் சிறப்பு மிக்கவர் என்பது, அவர் வழிபாட்டி னாலும், சிவயோகப் பயிற்சியினாலும், மாணவர்க்கு அருளுரை பகர்ந்து வழிபாடுகள் செய்வித்த ஈடுபாட்டினாலும், மெய்யுரைத்து மெய்யிலேயே ஒழுகிய மெய் வாழ்க்கையினாலுந் தெளியலாம். கலைச் சிறப்பில் மேம்பட்டவரென்பது, எந்நேரமும் நூல்களைக் கற்றுணர்ந்து, மாணாக்கர்க்கும் அறிவுறுத்தி, நாடெங்கும் ஆயிரக் கணக்கில் விரிவுரைகள் செய்து, கலை நூல்கள் பலப்பல இயற்றியதோடு, எல்லாவற்றிலும் ஆற்றல் புலப்படுத்தி வாழ்ந்ததனால் உணர்ந்துகொள்ளலாம்; பொருட் சிறப்பிலும் அதற்குரிய தொழிற் சிறப்பிலும் சிறந்தவரென்பது, அடிகளாரே அச்சுக் கலை தேர்ந்து, வெளியீட்டுத் தொழில், விற்பனைத்

தொழில்கள், செய்து வந்தமையால் அறியலாம். எடுத்துக் காட்டுகள்:

16-5-1921-ல் சட்ட வல்லுநரான யாழ்ப்பாணம் வட்டுக் கோட்டை நாகலிங்கம் அவர்கட்கு அகமுகப் பயிற்சி பற்றி அடிகள் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்; அக் கடிதத்தில்,

"அறிவு ஒரு மேற் பொருளை நாடி நிற்குமாறு பழகுதலே எல்லாவற்றிலும் சிறந்ததாகையால், அப் பயிற்சியை நாடோறும் கால் மணி நேரமாவது காலை மாலையிற் செய்து வருதல் நன்று; கடவுளின் மேற்பட்ட பொருள் இல்லையாகையால் அதனையே நாடல் வேண்டும்.

"கடவுள் நம்பொருட்டு ஒளியுடைப் பொருளிலேதான் விளங்கித் தோன்றுகிறார்; நமதுடம்பின் அகத்தும் புறத்தும் ஒளியில் விளங்குகிறார். ஆகையால் நமதகக் கண்ணாலும் புறக் கண்ணாலும் ஒளி வடிவில் இறைவனைக் கண்டு உருகி வழிபடுக. நமதுடம்பின் அகத்தே முக்கோண வடிவமாயுள்ள மூலத்தி லிருந்து தலையுச்சி வரையில் நுண்ணிய ஒளி வடிவு ஒன்றிருக் கிறது. இதனை நன்றாக நினைவிற் பதித்துக்கொள்ளும் பொருட்டுப் புறத்தேயும் அவ் வொளி வடிவினை அமைத்தல் வேண்டும், அதனைப் பின் வருமாறு செய்க:

"முக்கோண வடிவமான ஓர் இருப்புச் சட்டத்தின் மேல் வட்ட வடிவமான ஓர் இருப்புச் சட்டியை வைத்து, அதில் தீ வளர்த்து, அதன் எதிரே அசைவின்றி யிருக்க; கீழே ஒரு பலகையிட்டு அதன்மேல் இருந்து, வலக் காலை இடத் தொடை மேல் ஏற்றி நிமிர்ந்திருத்தல் வேண்டும்; கைகளிரண்டும் முழங் காலின் மேல் வைத்துக்கொள்க. சட்டியில் எரியும் ஒளி வடிவினை நன்றாய்ப் பார்த்து வணங்கி நினைவிலேற்றியபின், கண்ணை மூடிக்கொண்டு மூலத்தின்கண் உள்ள முக்கோணத்தினையும் அதிலிருந்து எழுந்தெரியும் குண்டலி ஒளியினையும் நினைத்து வழிபடுக. அதன்பின் அங்கிருந்து ஏறி, நெஞ்சத் தாமரையுள் அசையும் ஒளி வடிவாகிய அம்பலக் கூத்தினை வழிபடுக. அதன் பின் அங்கிருந்தேறித் தலையில் புருவத் திடைவெளியில் அவ் வொளியின் உச்சியிலே சிவந்த நிறமுடைய அப்பனும் வெண்ணில நிறமுடைய அம்மையும் ஒருங்கு பிணைந்திருக்கும் வடிவினைக் கருத்தூன்றி வழிபட்டு, முடிவில் திருநீறு அணிந் தெழுக.

"இவ் வழிபாட்டோடு சேர்த்துச் செயற்பாலதாகிய 'பிராணாயாம'மும் வேறு சில முதன்மையான பயிற்சிகளும் நேரே தெரிவிக்க வேண்டும்.

''மந்திரங்களாகச் சொல்லற்பாலன திருவாசகம் போற்றித் திருவகவலிலுள்ள சொற்றொடர்களேயாகும். தேவார திரு வாசகங்களில் தங்கட்கு விருப்பமான செய்யுட்களை உருவேற்ற லாம்.

''அம்மையப்பர், முருகர், பிள்ளையார், நடராசர் முதலான திருவுருவங்களில் எதன்கண் உங்கட்கு அன்பு மீதூர்கின்றதோ அதனையே வழிபடலாம். எதை நினைத்தாலும் ஒளி வடிவாக நினைத்தல் வேண்டும்.

''கல்லினும் செம்பினும் செய்த வடிவங்களும் ஒளி வடிவின் குறிகளேயாம். பளிங்கிற் செய்த சிவலிங்கமேனும், பொன்னிற் செய்த மற்ற உருக்களேனும், இவை இல்லையாயின் தாமிரம் முதலியவற்றிற் செய்தனவேனும், விளக்கொளி முன் வைத்து வழிபடுதற்காம்''.

''படுக்கப் போகும்போது உங்கள் உடம்பின் உள்ளும் புறம்பும் மின்னல் ஒளியால் நிறைக்கப்பட்டிருப்பதாகப் பாவித்து, 'The Light of Bliss pours into me perfect health Om' என்னும் மந்திரம் செபித்தவாறு தூங்கி, எழும்போதும் அங்ஙனமே செய்து எழுங்கள்''

(*மறைமலையடிகள், பக். 180*)

என்று வரும் பகுதிகள் அடிகளின் அகப்புற அருட் பயிற்சி களையும் திளைப்புகளையும் காட்டும்;

நுண்ணிய கவின் கலைக்கும் ஓர் எடுத்துக் காட்டு: இலக்கியம் ஒரு கவின் கலை.

''இரஸ்கின் என்னும் ஆங்கில மொழி உரைவல்ல ஆசிரியர், 'காட்டு' என்ற புலவரைப்பற்றிச் சொல்ல வந்தவிடத்து, 'அவர் தமதுணர்வின் வழியே உலக இயற்கையினை நிறுத்திக் கொள்ளாமல், அவ் வுலக யியற்கையின் வழியே தமதுணர்வினை நிறுத்தி நின்றார்' என்று புகழ்ந்தெடுத்துக் கூறினார்; (அதனாற் கலை பிறக்கின்றது.)

''அதுவே நல்லிசைப் புலவர்க்கு அடையாளம்''

''பழந்தமிழ்ப் புலவர்களெல்லாரும் இந் நுணுக்கம் இனிதறிந்து விளங்கினார்கள்; பழைய தமிழ்ப் பாட்டுக்களே சான்று:

*'முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்*
*கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்*
*குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்*
*தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்*

இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே'

''வற்றக் காய்ச்சின கட்டித் தயிரைப் பிசைந்த, காந்தள் மலர் முகிழ்போற் சிவந்த மெல்லிய விரல்களால், நன்கு கழுவி வெண்மையான உயர்ந்த ஆடை, சமையல் செய்யும் விரைவினால் இடுப்பினின்றும் அவிழ்ந்து கழல, அதனைக் கை கழுவாமலே உடுத்துக்கொண்டு, குவளைப் பூப் போன்ற மை தீட்டிய தன் கண்களிலே தாளிப்புச் செய்யும் புகை பட்டு மணக்கவும், அதனையும் பாராது, தான் துடுப்பினால் துழாவி மிக்க அன்போடு சமைத்த சுவை மிகுந்த புளிப் பாகினைத் தன் கணவன் மிகவும் இனிதா யிருக்கின்றதென்று சொல்லிக் கொண்டே உண்ணுதலைப் பார்த்து, ஒளி மிகுந்த நெற்றியினை யுடைய என் மகளின் முகம் உள்ளுக்குள்ளே நுட்பமாய் மகிழ்ச்சி யடைந்தது.''

என்பது இப் பாட்டின் பொருள்.

''காதற் கணவனும் மனைவியும் கெழுமியிருந்து இல்லறம் நிகழ்த்தும் ஒழுக்கம் 'முல்லை' எனப்படும். முல்லை நிலத்திற்கு ஏற்ப 'முளி தயிர் பிசைந்த' என்றார். தயிர் பால் முதலியன, ஆனிரை மிக்க முல்லை நிலத்திற்கே உரிய;

''தன் கணவன் மேலுள்ள காதன் மிகுதியினால், ஏவலரும் பிறரும் சமையல் செய்வதற்கு ஒருப்படாது, தானே தன் மெல்லிய சிவந்த விரல்களால் தயிரைப் பிசைதலும்,

''கணவன் பசித்திருப்பானே என்னும் நினைவால் விரைந்து சமையல் செய்யும்போது இடுப்பிற் கட்டிய உயர்ந்த ஆடை கழலவும், பிசைந்த கையினைக் கழுவிவிட்டு உடுப்பதற்குக் காலம் நீண்டு அப் புளிப் பாகின் பதங் கெடுமென உணர்ந்து, அக் கையுடனே அவ் வுயர்ந்த ஆடையைக் கட்டிக் கொள்ளுதலும்,

''அங்ஙனம் பிசைந்து திருத்திய புளிப்பாகினைத் தாளிக்கும் போது, மேல் எழும் புகை, தன் குவளைப் பூ அன்ன கண்ணிற் படவும், அப் புறந் திரும்பினால் அது பதங்கெடுமே என்று, முகந் திருப்பாமல் அதனை விரைந்து துழாவலும்,

''அங்ஙனமெல்லாம் தன் வருத்தத்தினையும் பாராது சமைத்த சுவை மிக்க அப் புளிப் பாகினைக் கணவன் மகிழ்ந் துண்ணல் கண்டு, தன் மகிழ்ச்சி வெளியே தெரியாமல், அவள் முகம் மலர்ந்து காட்டுதலும்,

''இயற்கையே தனக்குள்ள நாணத்தால் அவள் முகம் சிறிது கவிழ்ந்து நிற்க, அவளது ஒளி மிக்க நெற்றியே அம் மகிழ்ச்சிக் குறிப்புப் புலனாக முன் விளங்கித் தோன்றுதலும்,

''சில சொல்லில் மிக விளங்கக் கூறிய நுண்மை, பெரிதும் வியக்கற்பாலதொன்றும். இப் பாட்டின்கண் ஓவியம் எழுதிக் காட்டினாற்போல் எவ்வளவு உண்மையாகவும் இனிதாகவும் சொல்லப்பட்டிருக்கின்றது!

''இப் பொருளருமையோடு இச் செய்யுளில் உள்ள சொற்கள் எல்லாம், நீர் மடையில் வெளிநீர் மொழுமொழு வென்று ஓடுவதுபோல், ஓசையின்பம் உடையவாய் ஒழுகுதலும்,

''ஒரு சொல்லாயினும் பொருளின்றி வேண்டா கூற லாகாமல், முன்னும் பின்னுமுள்ள பொருட்டொடர்புக்கு ஏற்ப இடையே முழு முழுச் சொற்களாய் அமைந்து நிற்றலும் மிகவும் பாராட்டற்பாலனவாகும்'' என்பது.

(முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை, பக். 9-12)

மேற்காட்டிய குறுந்தொகைப் பாட்டின் உரையும் விளக்கமும் அடிகளின் கல்விப் புலமையோடு இலக்கியக் கலை யாற்றலையும் இனிது புலப்படுத்தும். அடிகளார்க்கு அமைந்த செய்யுளியற்றுங் கல்வியுங் கலையும் இணையற்றவை;

''உருக்கிளர் இளந்தளிர் உலரத் தீய்த்திடு
பொருக்கெனுந் தீவளி பொருந்த வாடிய
மருக்கமழ் மல்லிகை போன்ற மாதர்பால்
இரக்கமும் இன்பமும் ஒருங்கெ முந்தவே''
விழைநறவு வேண்டிவிரி மாவிணரிற் பருகிச்
செழுமுளரி இடைவறிது சேருமிள வண்டே!
செழுமுளரி யிடையிருந்து திகழ்மாவை நீயோர்
பொழுதுமறந் துறைகுவது பொருந்துமோ உரையாய்?

(சாகுந்தல நாடக மொழிபெயர்ப்பு, பக். 48, 81)

'கலை' என்பது மனம் முதலிய பதினாறு அகக் கருவிகளின் இயல்; 'கல்வி' என்பது. மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் நால்வகைக் கருவிகளின் இயலே! 'கல்வி' மனப் பழக்கம் என்னும் ஔவைப் பெருமாட்டியின் கருத்து இங்கே நினைவு கூர்தற்குரியது! கல்வியால் கலை மிகும். அறிவுக்குரியது கல்வி; உணர்வுக்குரியது கலை; எல்லாம் கருவிகளில் ஊடுருவுவன.

அறிவு விளக்கம் மிகுதியாகப் பெருகித் தோன்றுவது. மனமும் பொறி புலன்களும் வான் வளி முதலிய உலகக் கூறுகளு

மாகிய புற நிலைகளில்; 'ஆன்ம தத்துவம்' என்னும் பகுதி இது! 'வித்தைத் தத்துவம்' என்பது, சிறப்பாகக் கலைக்குரியது; 'சுத்த தத்துவங்கள்' அருட் கலைக்குரியன; 'வித்தைத் தத்துவங்'கள் ஏழும், 'சுத்த தத்துவங்கள்' ஐந்தும், பொதுவாகக் கலை நிலைகளேயாயினும், முன்னவை தூய்மை குறைந்தும் பின்னவை தூய்மை மிகுந்தும் நிகழ்வன; இவையிரண்டும் உணர்வு மிகுதற் குரியன; முறையே 'கலையும்' கவின் கலையு'மாய் வாழ்க்கையிற் சுடர் விடும்.

இங்ஙனம் 'கல்வி' 'கலை' 'கவின் கலை' என்பன Science, Art, Fine Art என்று பிற மொழியாளராற் கூறப்படுகின்றன. மேல் வந்த குறுந்தொகைப் பாடலின் உரைத் திறமும் விளக்கச் சிறப்பும் செய்யுட் செப்பமும் கல்வி நலன்கள்; இவற்றின் உலகியற்கை விளக்கங்களும் குணம் எனும் உணர்வுச் சிறப்பும், மொழியில் மிளிரும் நளினமும் கலைத் திறத்தைச் சேர்ந்தவை; இவற்றில் வந்த உண்மைக் கூறுகளாகிய தெய்வ வல்லமைகள் 'கலைக் கவின்'கள்! சில இலக்கியங்களில் இவ்வொளி மிகப் பெருகி யொழுகும்; சில நூல்கள் சில நலங்களில் மிகுந்து தோன்றும்; ஆசிரியரடிகளுக்குப் பத்துப் பாட்டுகளின் ஏனை நூல்களைப்போல் 'முல்லைப் பாட்டு' சில வகைகளில் நிறைவு தரவில்லை; தித்திப்பாக எழுதப்பட்ட ஓரடியையாவது இம் முல்லைப் பாட்டிற் காண்டலரிது; சொல்லின் கொழுமை இதன் கண் மிக முதிர்ந்து தோன்றுமையின் இது, தன்னைக் கற்பார்க்கு மிக்க சொல்லின்பம் பயவாதென்று கருதுகின்றும்; (முல்லைப் பாட்டாசிரியா), சுவைப் படாத ஒரோ வொன்றனையும் சிறிது அகல விரித்துக் கூறுகின்ருர்'' என்பன (முல்லைப்பாட்டாராய்ச்சி யுரை, பக். 57, 54) அடிகளார் கருத்து; அடிகளார்க் கமைந் திருந்த இலக்கியச் சுவையுணர்வுக்கு முல்லைப்பாட்டின் சில நிலைகள் அவ்வாறுள்ளன! சேக்கிழாரின் செய்யுள் நலங்களில் திளைத்து மகிழ்ந்த திருவாவடுதுறை மீனுட்சி சுந்தரம் பிள்ளை யவர்களின் இலக்கிய உணர்வு "பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ'' என்று, அப் பேரிலக்கிய மேன் மையை எடுத்துக் காட்டியது! இலக்கியங்களில் இங்ஙனம் கல்விச் சிறப்பும்; கலைச் சிறப்பும்; கவின் கலைச் சிறப்பும் பல வாருய், ஏறியும் இறங்கியும் இருப்பது இயல்பே!

இவை முத்தமிழாலும் வெளிப்படும்; இயற்றமிழ்க் கலைக் கவின் என்பது இலககிய மாண்பு; இசைத்தமிழ் கவின், செய்யுளும் உரையும் ஓசை இடையற்றுப் போகாமல் இழுமென் ரெழுகுதலும், வண்ணம் வனப்புகளும், வெண்பா முதலிய நால்வகைப் பாக்களின் செய்யுளோசைகளும், இசைகளுக்கேற்ற

இசைப் பாடல் அமைவுகளுமாகும்; நாடகத் தமிழ்க் கவின், சிறந்த உரையாடல்கள், மெய்ப்பாட்டு விளக்கங்கள், வரலாற்றுக் கதை நிகழ்ச்சிகள் முதலியன!

'மனம்' முதல் 'நாதம்' இறுதியாகப் பதினறு அகக் கருவிகளும் அடிகளாரிடத்தில் நன்கு மலர்ந்து மணம் கமழ்ந்து இயங்கி வந்தன. அதனல் கல்வியும் கலைகளும் அவர்களிடத்திற் களி நடம் புரிந்தன; மேல் வந்த எடுத்துக் காட்டுகளில், ஆற்றல் விளங்கிய இடமெல்லாம், கலைத் திறம் ஒளிவிடும் நேர்வுகளாகும். குறுந்தொகைச் செய்யுளைக் கூறிவிட்டாற் போதாது; அவற்றிற்கு உரையும் தெரிவித்தாற்றன், கற்பவர்க்குத் தெளிவு உண்டாகும்: உரிய விளக்கங்களும் புலப்படுத்தினற்றன் படிப்பவர்க்குப் பாட்டின் நலம் தக்காங்கு வெளிப்படும் என்றெல்லாம், கற்பவர் எண்ணங்களுக்கும் ஆர்வம் விளக்கம் முதலியவற்றிற்கும் பயன்படும்படி முன்னுணர்ந்து செய்வகை ஆற்றலுடன், உணர்வு இசைவுகொள்ள எழுதியது கலைச் சிறப்புகளாகும்;

அடிகளாரிடத்தில் விளங்கிய இத்தகைய கலைச் சிறப்புக்கள் பலவகை; பிறர்க்கு இயலாதனவெல்லாம் இவ் வகையில் அடிகளார்க்கு எளிதின் இயன்றன; பிறர்க்கு இடரா யிருந்தவையெல்லாம் அடிகளால் இனிமையாய் நீந்தப்பட்டன. முயன்றும், முயற்சியில் இன்னலுருமலும், நீந்துதல் நிகழ்ந்தது; கலையுணர்ச்சி இல்லையானல், இவ்வாறு நீந்திக் கடத்தல் அரிது; கல்வி நலம் மிகப் பெற்றர்க்கும் இங்ஙனம் நீந்திக் கடத்தல் இயலாது; பிறர்க்கெனப் பொதுவில் முயலுவோர்க்கு மட்டுமே இத் திறம் அமைகின்றது; தூய்மை என்பதே பொது நலந்தான்; ஆயினும், தனக்காக முயல்வதும் பொதுவில் உழைப்பவர்க்குக் கடமையே என்றல், அது தூய்மையின் தொடக்கமாகிய தன்னல மயக்கமாகும்.

கலையாற்றல், தூய்மையை நோக்கிச் செல்லுகின்றது; அதன் முதற் பகுதி தூய்மையும் தூய்மையல்லாமையுங் கலந்த மயக்கமுடையது; ஆதலின் அது கலங்கல் நிலை; முயற்சி மிக்கது! தூய்மையாகிய அருட்கலையிற் சென்றர்க்கு மட்டுமே, முன் முயற்சியும், எளிமை இனிமைகளுடன் சிறக்கும்; அடிகளார் அத்தகைய 'சுத்த தத்துவச்' செல்வர்; 'வித்தைத் தத்துவங்'களையும் 'ஆன்ம தத்துவங்'களையும் பொதுச் சேவையில் இயக்கும் புனிதச் சேவை, அவர்கள் வாழ்க்கையில் நடந்து வந்தது!

அடிகளார் எழுத்துக்கள் பேச்சுக்கள் வாழ்க்கை முறைகளிலெல்லாம் தூய்மைக் கலை மிகுந்து தோன்றும். மக்களை

உயர்ந்த தெளிவில் விளங்க வைப்பதற்கு அடிகள் பல வகை யாகப் புனிதப் பணி இயற்றியிருக்கிறார். புலவரென்பார் பலர்க்கு இடராயிருக்கும் நிலைகளில், அடிகள் நழுவமாட்டார்.

"மடுத்தவாயெல்லாம் பகடன்னான்" (திருக்குறள், 624)

என்னும் மறை மொழிக்கேற்ப நாளும் வென்று விளங்கினர்!

கற்பவர்க்கு உண்டாகக் கூடிய ஐயங்களை முன்னறிந்து எழுத்துக்களில் பேச்சுக்களில் இட்டு, மேல் மேல் அடுக்கிக் கொண்டு, அடிகளார், தாமே அவற்றிற்கு விடைகளும் கூறுவார்; கூறுவது எதுவும் நாகரிக அறிவுக்கும் ஒப்புத லுக்கும் ஏற்றதாயிருக்கும். விளக்க வேண்டியவற்றை விடாமல் விளக்குவார்; தள்ளிச் செல்லமாட்டார்; சொற்பொருள் தோற்றித் தெளிவுபடுத்துவார்; மறுக்க வேண்டியவற்றைத் துணிந்து மறுப்பார்; எழுத்து, சொல், பொருள் என்னும் தொல்காப்பிய இலக்கண முறைகளையும், 'செய்யுள்' 'மரபு', 'அணி' வகைகளையும் நூற் சிறப்புக்கு வகுக்கப்பட்டிருக்கும் எல்லா உத்திக் கூறுகளையும் அளவை நெறிகளையும், கையாள் வார். சொற் சுவை பொருட் சுவைகளிலும் உண்மைகளிலும் கருத்தா யிருப்பார். இடையில் வேறொன்றை எவ்வளவு பெருக்கி விரித்தாலும், எடுத்த கருத்தை முடிவில் நினைவாகக் கொண்டு கூட்டுவார். இறுதியில் எல்லாக் கருத்துக்களையும் முறையாகவும் விடாமலும் சுருக்கித் தொகுத்துரைப்பார். ஆராய்ச்சியாளர்க்கும், ஐயுறுவோர்க்கும், மாறாயினார்க்கும், அன்பர்க்கும், மாணாக்கர்க்கும் பல வேறு வகையில் அறிவு தெளிவு இசைவு புதுமை அருமையாகிய இனிய சிந்தனை விருந்துகள் வைப்பார். சிக்கல் தீர்ப்பார். இருவகை வழக்கு களையும் அலசுவார்; எப்போதும், சான்றுகள் காட்டாமல் வழுவமாட்டார்; அவற்றிலும் மிகப் பழைய சான்றுகள், மிக வலிய சான்றுகளே எடுத்துத் தொடுப்பார்; பழைய அயல் நூற் குறிப்புகளும், ஆங்கிலச் சிறப்புகளும், அவற்றின் உதவி யாற் பிற மொழிப் பெருமைகளும் ஒப்பிட்டு நோக்கி உரிய மேன்மைகள் புலப்படுப்பார்; குறிப்புகள் இருக்குமிடங்களைச் சோம்பாமலும் குழப்பாமலும் இழக்காமலும் குறித்துச் சேர்ப் பார்; சுருங்கச் சொன்னால், பல தலையான கல்வி கலை யாற்றல்கள் அடிகளாரிடத்தில் மலர்ந்து கிடந்தன எனலாம்.

### சமயக் கலை

முதலில் எண்ணுதற்குரியது, சமயம்; 'அருட்கலை'யாதல் கருதி அதுவும் 'கலை' எனக் கருதப்பட்டதே தவிர, மற்று, அது, கருவிகள் மூலம் விளங்கும் கலைகளெல்லாம் ஒருங்கு குவிந்து,

கருவிகள் கடந்த உயிரினியல்பாய் உயர்ந்து, அன்புணர்வில் அமர்ந்து, அருள் வழிப்பட்டு, இறை நிலையை எய்துவிக்கும் பெருமை சிறந்தது எனல் வேண்டும்; மக்கள் அடைய வேண்டிய பெருமையெல்லாம் இதனில் அடங்குதலாலும், இதற்குமேல் நுணுக்கம் (சிறுகி நிற்றல்; சிற்றம்பலமாதல்) ஏதுமில்லாமையாலும், வீடுபேற்றைச் 'சிறப்பு' என்பர் சான்றோர்; வீடுபேற்றுக்கு ஏதுவாகிய 'ஞான'மும் 'தவ'முங் கூட இப் பெயராற் கூறப்படும்.

"சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும்,"
"சிறப்பு என்னும் செம்பொருள்" —(திருக்குறள், 31, 358)
"சிறந்தது பயிற்றல்" —(தொல்காப்பியம், 1138)

சமய நெறி, என்பது ஞான வழிபாடு; ஞானத்தால் வீடு என்றாலும், அறத்தால் வீடு என்றாலும், சமயத்தால் வீடு என்றாலும் ஒன்றே! ஞானநெறி, அறநெறி, சமயநெறி எல்லாம், உண்மை நெறி அல்லது சன்மார்க்க நெறி என்னும் ஒரே குறிப்புடையன; மக்களாய்ப் பிறவி எடுத்தார் அனைவருக்கும் அது பொதுவாதலால் 'சமரசம்' எனவும், நிலைபேற்றுண்மையின் விளக்கமேயாதலால் 'சத்தியம்' எனவும், தூய்தாதலால் 'சுத்தம்' எனவும், வள்ளற் பெருமான் அடைமொழிகள் தந்து, சரியான சமய நெறியைச் 'சமரச சத்திய சுத்த சன்மார்க்கம்' என வழங்கினர்.

இத் தொடரில் வரும் சமரசம், சத்தியம், சுத்தம், சத் என்பன, முறையே சரியை ஞானம், கிரியை ஞானம், யோக ஞானம், ஞான ஞானம் என முன்னோர் வழங்கிய முறைமைகளுடையன. சரியை தொடங்குவோர், எல்லார்க்கும் பொதுவெனத் திகழ்வர்; கிரியை நிகழ்த்துவோர் உண்மையில் ஈடுபடுவர்; யோகம் பயில்வோர் தூய்மையில் நிற்பர்; ஞானம் பெறுவோர் பற்றற்றொழுகுவர்; 'சன்மார்க்கம்' என்பது ஞான மார்க்கம்; பககுவம் எய்திய உயிர்கள், அதனில், ஞானச் சரியையாகிய 'தாசமார்க்கம்', ஞானக்கிரியையாகிய 'சற்புத்திர மார்க்கம்' ஞான யோகமாகிய 'சக மார்க்கம்' நின்றெய்திய பின், ஞான ஞானமாகிய சன்மார்க்கம் கூடுவர்.

'சன்மார்க்கம்' என்பதும் ஒரு மார்க்கமே! அந் நெறி வழிப் பட்டோர், 'வீடு' என்னுந் துறை புகுவர்; அது வரையில் அவர்கள் 'துச்சில்' இருந்த உயிர்களே! 'வீடு' என்னும் புக்கிலாகிய பேரின்ப மாளிகை எய்திய பின் மீண்டு உடம்பினுள் துச்சிலுக்கு (ஒதுக்கிய தங்குமிடத்துக்குத்) திரும்பார் - (திருக்குறள், 340).

சமயக் கலை இரு வகைப்படும் ; ஒன்று தவம் ; மற்றொன்று ஞானம்; 'தவம்' என்பது 'யோகம்'; உண்மைப் பொருளில் ஒருமைப்படுதல்! ஞானம் என்பது அதனால் விளங்கும் விளக்க மாகிய தெளிவு! இந்த யோகக் கலையைத்தான், 'வேதாந்தம்' என்று முன்னோர் கூறினர். 'கீதை நூல்' அதனால் பதினெட்டு வகையான யோகங்களாக வகுக்கப்பட்டது! 'சித்தாந்தம்' என்பது ஞானம்! 'சைவ சமயம்' சித்தாந்தத் துணிபுடைய தாதலின், 'சைவ சித்தாந்தம்' என்னும் பெருவழக்கு நாட்டில் ஏற்பட்டது! சைவ சமயம் (ஞானம்) வீடுபேற்றுத் துறை வரையிற் சென்று முடிதலின் 'துறை' எனவும் அது சிறப்பிக் கப்பட்டது; வேதம், வேத முடிவாகிய உபநிடதமெனப்படும். வேதாந்தம், மகா வாக்கியம் எனப்படும். வேதாந்தசூத்திரம், சங்கர இராமாநுச மாத்துவ பாடியங்கள், கீதை முதலியனவெல் லாம் வீடுபேறு நோக்கும் நெறிகள்; சேக்கிழார் பெருமான் வேத நிலையை நெறி எனவும், அது தழைப்பதற்கும் ஓங்குதற்கும் உரியது எனவும், சைவத்தின் நிலை 'துறை' எனவும், அது சுடர் விட்டு விளங்குதல் மாத்திரையே உரியது எனவும் தோன்ற, "வேத நெறி தழைத்தோங்க, மிகு சைவத் துறை விளங்க" (சம்பந். 1.) என்று திருவாய்மலர்ந்தமை காண்க.

தவம் என்னும் யோகத்தில் கருவிகளின் மூலம் விளங்கும் ஆற்றலெல்லாம் குவிந்து ஒருமைப்படுதலின், அந் நிலைமை யைக் 'கலை ஞானம்' எனவும், அக் கலையை 'யோகக் கலை' எனவும் கூறுவதுண்டு. 'யோகம்' என்பது ஒரு கலையே ;

"உவமையிலாக் கலை ஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்"

என்பது திருத்தொண்டர் புராணம் (சம்பந். 70);

"மேவரு ஞானம் இரண்டு ; அவற்றொன்று,
　　விமலனார் பாத தாமரையே
ஓவரும் அன்பின் உணர் திரு அளிக்கும்,
　　ஒப்பிலா உயர் கலைஞானம்"

—(தணிகைப் புராணம், அகத். 353);

'சரியை கிரியை யோகம், ஆகிய சீலம் நோன்பு செறிவு மூன்றும் தவமெனப்படுமாகலின் 'தவம்' என்பது, இம் மூன்றில் உயர்ந்ததான 'யோகம்' என்னும் பெயரினால் கூறப் படுவதாயிற்று. 'தவ யோகம்' என்னும் வழக்கும் நினைவு கூரலாம். 'தவத்தில் யோகம்' எனவும் 'தவமாகிய யோகம்' எனவும் இரு வகையாகக் கூறப்படுங் கருத்தும் இதற்குப் பொருந்தும். இங்ஙனம் சமயமும் ஒரு வகைக் கலையாயிற்று!

அடிகளார் இக் கலையில் வல்லவர்களென்பது வெளிப் படை ; 'சிவஞான போத ஆராய்ச்சி (1958)' 'சைவ சித்தாந்த

ஞானபோதம்' (1906) 'கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா' (1929) 'பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம்' (1930) 'திருவாசக விரிவுரை' (1922), முதலிய சமய நூல்களும், சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம், நாகை, திருச்சி, தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபைகள் முதலிய எத்தனையோ பேரவைகளில் நிகழ்த்திய எண்ணிறந்த சமய விரிவுரைகளும்; மாநிலச் சைவ நிலையமான 'சைவ சித்தாந்த மகா சமாசத்'தை நிறுவி அதன் செயலாளராயிருந்து நடத்திய தொடர்பும்; திருப்பாதிரிப்புலியூர் 'ஞானியார் மடாலயத்'தில் நடந்த நாடுமுழுதுந் திரண்ட பெரிய 'சைவர் மாநாட்டுக்'குத் தலைமை தாங்கிய சிறப்பும் பிறவும் சான்றுகளாம். 'வைதிக சைவ சித்தாந்த சண்ட மாருதம்' எனப் பெயரும் பீடும் ஓங்கிய சிவஞான வள்ளல் சோமசுந்தர அடியவர்பால் மாணுக்கராய் அமர்ந்து சித்தாந்தம் தெளிந்தும், திருக்குடந்தைக்கருகில் திருக்கொட்டையூர் இராசாநந்த யோகியார்பால் அகமுகப் பயிற்சி பெற்றுச் 'சிவராச யோகம்' உணர்ந்தும், தமது முற் பிறவித் தொடர்பால் அருள் மின்னல் ஒளி சூழச் சிவத் திளைப்பில் திகழ்ந்தும் திருவிளையாடல் புரிந்தவர் அடிகளார்! இவர்கள் அகமுகப் பயிற்சியின் ஒருவகை, முன்னும் எடுத்துக் காட்டப்பட்டது; 'தமிழர் மதம்' (1941) என்னும் அடிகளார் நூலில் 'தவப் பயிற்சி' என்னும் தலைப்பில் வரும் பகுதியிலும் காண்க.

கலை என்பதைப் பெரும்பாலும் 'பொருட் கல்வி' என்று கருதி, அறிவியல் துறைகளெல்லாம் எடுத்துக் காட்டப்படுவ துண்டு; ஆனால், அவையெல்லாம் 'கல்வி' யேயன்றிக் கலை களல்ல. இந்நுட்பம் இனிது விளங்கும் பொருட்டே, கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை எல்லாம் பொருட்பாலில் வைத்து அறிவுரை செய்தார் திருவள்ளுவர்; இன்பப்பால் மட்டுமே கலைப்பாலாகும். அன்புணர்வு, கருவிகள் மூலம் பாய்ந்து அவற்றை இயக்கும் அகவுணர்வாகிய அகப்பொருட் கலையாதலின், அதனை மொழியால் வெளிப்படும் கல்வியைப் போல் நினைத்துவிடலாகாது; மொழிக்கும் நினைவுக்கும் அப்பாற் பட்டதாய் உயர்ந்து நுணுகி வித்தைக் கருவிகளாலும் 'சுத்தக்' கருவிகளாலுமட்டுமே வெளிப்படுவதாய், மன வாக்குகளுக்கு எட்டாத கடவுளை நாடி, அங்ஙனமே மன வாக்குகளுக்கு அப் பாற்பட்ட உயிருணர்வாய், உயிரின் நிலையைக் கருவிகளுடு உயர்த்தி முன்னேற்றுவதாய், இக் கலைநிலைகள் திகழ் கின்றன;

"(முதல்வனை) அனுபவித்தல், அவன்போற் காணவும் கருதவும் உரைக்கவும் படாத உணர்வு நிலை ஒன்றற்கு மாத்திரமே வாய்ப்பதாம்." (பட்டினப். பக். 6)

என்பது அடிகளார் பொன்மொழி !

இவ்வுணர்வு நிலையின் ஒரு புறமே, (கீழ்ப் பக்கமே) தூய, தூயவல்லாக் கருவிகள் மூலம் வெளிப்படும் அருட் கலையும் கலையும்; மறுபுறமே, திருவருள் மூலம் இறைவனை எய்தும் ஞான நிலை; இவை ஒரு பொற்காசின் இருபக்கங்கள் போல உயிரின் உயர்ந்த இயல்பாகிய அன்பின் இரு பக்கங்கள் ! இதில் வரும் 'அருட் கலை' என்பது சேவைத் திறம் என்னும் 'அருளுடைமை'யாகிய சீவகாருணியம்!

பொருட் கல்வியும், 'பொதுக் கல்வி' எனவும் 'விஞ்ஞானக் கல்வி' எனவும் இருவகைப்பட்டு, மனம் முதலிய நான்கு அந்தக்கரணங்களால் மட்டும் நிகழ்கின்றன; இந் நான்கில் 'மனம், ஐம்பொறிகள் மூலம் இயங்கித் தொழிற் கல்வி'யாய் நடைபெறுகின்றது.

"எண்என்ப, ஏனை எழுத்தென்ப, இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு"

எனத் திருவள்ளுவர் இக் கல்வி நிலைகளை ஒரு கண்ணாகவும், இவற்றை வெளிப்படுத்தும் மொழி நடையை மற்றொரு கண்ணாகவும், வாழும் மக்களுக்குப் பார்வையாக உருவகப்படுத்தி விளக்கினார். கண்ணற்ற உயிர்கள் நடைப் பிணம் போல்வராகலின், நாகரிகமாய் வாழ விரும்புவோர் இக் கல்விப் பார்வை உடையவர்களாய்ச் சிறக்க வேண்டுமென்று திருமறைக் குரவர் தெரிவிக்கிறார். 'எண்' என்பது எண்ணம்; எழுத்தின் மூலம் எளிதாகவும், நேர்க் காட்சியிற் சிந்தனையாகவும் எண்ணும் பொருட் கல்விகள் இங்கே 'எண்' எனப்பட்டன, எழுத்தின் மூலம் முதலில் எளிதிற் கிடைத்தலின் மொழிக் கல்வியின் முதன்மையும் எடுத்துக் காட்டினார் ஆசிரியர் !

அத்தகைய பொருட் கல்விகளிலும் அடிகளார் வல்லுநர்! தாய்மொழியாகிய தமிழோடு பழைய வேறொரு மொழியாகிய சமக்கிருதமும், புதிய உலக மொழியாகிய ஆங்கிலமும் என்னும் மொழிக் கல்விகளாகிய கண், நற்பார்வையாய் அமைந்து விட்டது; 'பொருட் கல்வி' என்பதற்கு மிகச் சிறப்பாய்ப் போற்றப்படும் அறிவியற் கல்விகளாகிய மற்றொரு கண்ணும் புத்தொளி மிக்குச் சிறப்பின் அமைந்துவிட்டது! பேரொளிப் பார்வைகள் இரண்டாலும் அடிகளார், உலக வாழ்வை இனிதளந்து மக்களை வாழ்வித்தார்கள்!

அடிகளார் அருளிய அரிய நூல்கள், பொருட் கல்விக்குக் கடல்! கலைக் கல்விக்கு மலை! அறக் கல்விக்கு ஞாலம்! வீட்டுக் கல்விக்கு வான்! அவற்றில் பொருட் கல்விக் கடலை எடுத்துக் கொண்டால், அதன் அகலமும் ஆழமும் அரும் பொருள்களும், இன்காற்றும், கருத்தலைகளும், அடங்கி வீசும் அருமையும், குளிர்ந்த இரக்க ஒளியும், நடுநிலை நிறமும், பிறவும் அனைவர்க்கும் வியப்பைத் தரும்; பிறவும் அத்தகையன!

அடிகளார் நூல்களிலெல்லாம் சமய உண்மைகள் கலவாமலிரா; அடுத்தபடி எல்லாவற்றிலும் வரலாறுகள் செறிந்திருக்கும்; தம் ஆசிரியர், 'சோமசுந்தரரின் வரலாறும்' (1957), 'பண்டைத் தமிழரும் ஆரியரும்' (1960), 'மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்' (1930) என்னும் அரிய பெரிய வரலாற்று நூல்கள் இதற்குப் பேரளவிற் சான்று!

கல்வியோ கலைகளோ மெய்யுணர்வோ எவையாயினும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்குத் தானே! 'மக்கள் நூறுண்டு வாழ்க்கை' (1933), 'மரணத்தின் பின் மனிதர் நிலை' (1917), வாழும்போது அறிந்துகொள்ள வேண்டிய 'தமிழர் மதம்' (1941), முதலிய நூல்கள் வாழ்க்கைத் திளைப்புக்கு உதவும்.

மாந்தர் பருமையிலிருந்து நுட்பம் பெறவே பிறவி யெடுக்கின்றனர்; பொறி புலன்களாகிய புறக் கருவிகளிலிருந்து மனம் முதலிய அகக் கருவிகளில் திரும்பினுல், நுட்பத் திறங்களெல்லாம் எளிதில் எய்தலாம்; இம் 'மனவியல்' முறைகளையும் நலங்களையும் பயன்களையும் தெரிவிப்பன, 'யோக நித்திரை' (1922), 'மனித வசியம்' (1937), 'தொலைவிலுணர்தல்' (1935), முதலிய நுண்பொருள் நூல்கள்!

இத்தகைய அரிய கல்விகளில் அடிகளார் முதலில் தாமே பழகித் தேர்ந்து, அப் பழக்க உணர்வாலும் தெளிவாலும் பிறரும் பழகுமாறு கருத்துக்களை மறைப்புத் திறப்பின்றி விளக்கமாக எடுத்துக்காட்டுவார்! அவ்வாறு காட்டும் வகையிலும், பலப்பல பொருட் கல்விகளின் திறங்கள் அங்கங்கும் சிந்திச் செல்லும்!

'உயிர் நூற் கல்வி' 'தொழிலியற் கல்வி' 'கணு நூற் கல்வி', 'உடல் நூல்' 'வள நூற்' கல்விகள், 'இயற்கை நூல்' 'பொருள் நூற்' கல்விகள், 'நிலநூல்' 'வான் நூற்' கல்விகள், 'மூச்சு நூல்' 'மருத்து நூற்' கல்விகள், 'செடிகொடி நூல்' 'விலங்கு நூற்' கல்விகள், 'உணவு நூல்', 'மரக்கறி நூற்' கல்விகள்' 'கரு நூல்' 'மரபு நூற்' கல்விகள், 'மின்னல்' 'மின்னணு' நூற்

கல்விகள், 'கோள் நூல்' 'குடிமை நூல்' 'அரசியல்' 'அமைச்சியல்' 'அற நூல்' 'இன்ப நூற்' கல்விகள், 'ஒளி நூல்' 'ஒலி நூற்' கல்விகள், 'நிற நூல்' 'உலோக நூற்' கல்விகள், 'புதை நூல்' 'மழை நூற்' கல்விகள், 'உழவு நூல்' 'வணிக நூற்' கல்விகள், 'கால நூல்' 'திணை நூற்' கல்விகள், 'உறுப்பு நூல்' (Physiognomy) மண்டை நூல் (Phrenology) 'நரம்பு நூற்' (Neurology) கல்விகள், 'குழந்தை நூல்' 'குழந்தை வளர்ப்பு நூற்' கல்விகள், 'உடற் பயிற்சி', 'தத்துவப் பயிற்சி' கல்விகள், 'யோக நூல்' 'ஞான நூற்' கல்விகள், 'சித்தர் நூல்' 'சித்தாந்த வேதாந்த நூற்' கல்விகள், 'பரபக்கம்' 'பல சமய நூற்' கல்விகள், 'மறை நூல்' 'நல நூற்' கல்விகள் பலவும் அடிகளார் நூல்களில் கருக்கொண்டு மக்களுக்குப் பெரும்பயன் விளைத்திருக்கின்றன. இவற்றிற்காக அடிகள் படித்துத் தெளிந்திருந்த உயர்ந்த தமிழ், சமக்கிருத, ஆங்கில நூல்களையெல்லாம் இங்கெடுத்துக் காட்டுதல் பொருந்துமேனும், இக் கட்டுரை மிக விரியுமாதலின் வாய்ப்பில்லை; அன்பர்களே உய்த்தறிந்து கொள்ளலாம்.

இனி, இப் பொருட் கல்வியை அடிகளார் மக்களுக்குப் பயன்படுமுறையில் விளக்கிய பேராற்றலும் முறைகளும் பல; இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பெரும் புலவராய்த் தமிழகத்தில் வான் ஞாயிறெனத் தலைமை தோன்ற விளங்கியவர் அடிகள். இந் நூற்றாண்டில் தமிழை வளர்த்த பெரியோர் வேறு சிலரும் உளர்; ஆயினும் அதன் உயிர்ப்பும் இயல்பும் சுவையும் வரலாறுந் தோன்ற வளர்த்த வீரப் பெருமகனார் இவர் ஒருவரே! தந்நலம் விடுத்துப், பல வழக்குகள் பிறர் இழுக்குகள் எல்லாவற்றிலும் முன் வந்து, தலை நிமிர்ந்து களம் ஒடித் தோள் கொட்டிப் போர் தாங்கி வெற்றி கண்டவர் இத் தனித் தமிழ் வீரரே; உரை நடை, செய்யுள் இயல், செய்யுள் உரை, கட்டுரை வன்மை, கதை யழகு, நாடகக் கவின், ஆராய்ச்சி வகை, மொழி பெயர்ப்பாற்றல், சீர்திருத்தச் சிறப்பு முதலிய பல ஊக்கத் திறங்களையும் தமிழிற் கையாண்டு கலைத் திறங்கள் பெருக்கினார்; இவை பலவும் கல்வித் திறங்களல்ல; இத்தனை வகைகளும் பிறராற் கையாளப்படவில்லை; தமிழ் வளர்த்தவருள் இணையற்ற ஒருவராய் நின்று விளங்கியவர் அடிகளார்; இம் முறைகள் பலவும், 'புதுமைச் சிறப்புப்' பெற்றவை; 'இயல்பு வல்லமையும்' உடையவை; இணையற்ற 'இனிமைச் சுவையும்' வாய்ந்தவை!

'பொது மக்களும், பிற்பட்டவர்களும், தாழ்த்தப் பட்டவர்களும், முன்னேற வேண்டும்; உயர்ந்த நோக்கங்கள் வாய்ப்புக்கள் கொண்டு வாழ்க்கை விளக்கம் பெறவேண்டும்; நாகரிகத்திற் சிறங்கவேண்டும்' என்பது அடிகளார் நோக்கம்;

'காலத்துக் கேற்றபடி தமிழ் உதவ வேண்டும், தமிழர்க்குத் தமிழே கதி' என்பதும் அடிகள் கருத்து; 'எக் காரணத்துக் காகவும் அதன் பழைமைச் சுவையும் வரலாற்றுப் பெருமையும் கெடலாகாது; பழைமை வேர் ஊன்றிப் புதுமைக் கொடி படர்ந்து, ஆராய்ச்சி முறை மலர்ந்து, திருவருட் கலை கமழ்ந்து, நாகரிகக் கனி சிறக்க வேண்டும்' என்பது அவர்கள் எண்ணம்; உரை நடை நூல்களே இதற்குத் தக்கதென்பது அவர்கள் செய் முறை!

மாணவர்களையும் இந் நிலைமைக்கே அடிகளார் பழக்கினுர்; பாடந் தொடங்கிச் செய்யுள் இலக்கணம் பழகியதும், வெளி யூரிலிருக்கும்போது நான் பல்வகைப் பாட்டு வண்ணங்களில் அடிகட்குக் கடிதங்கள் எழுதிவந்தபோதெல்லாம், என் கவிதை வழியை அடிகள் தூர்த்துவிட்டார்; 'தமிழிற் சான்றோர் செய்யுட்கள் ஏராளமாய் உள்ளன; உரை நடை நூல்களே இக் காலத்துக்குத் தேவை; பொதுமக்கள் பயன் கொள்வது முதன்மை; ஆதலால், செய்யுட்கள் எழுதுவதை விடுத்து, இனிய உரை நடை எழுதுதலில் உள்ளங் கொள்' என்று வாய்மலர்ந்து வழி திருப்பி விட்டார்கள்; அதுமுதல், செய்யுட் செய்தல், அடிகள் கட்டளை யிருக்கும்போதுமட்டும் நிகழ்வதாயிற்று; அவர்கள் மறைவுக்குப் பின்பும் அவர்கள் கருத்தே பின் பற்றுவது வழக்கமாயிற்று;

அடிகளார் நூல்கள் பெரும்பாலும் தமிழ் உரை நடை நூல்களே; ஆங்கில மொழி உரை நடையில், தமிழ் நூல் பல வற்றிற்கு முன்னுரைகள் பல பக்கங்கள் எழுதியிருக்கிருர்; 'The Saiva Siddhantha as a Philosophy of Practical Knowledge' (1923) என்னும் தனி ஆங்கில நூல் ஒன்றும் வெளி வந்திருக்கிறது. Oxford கல்லூரி யொன்றைச் சேர்ந்த Dr. F. C. S. Schiller என்பவர் பரிவுரையும் அது பெற்றிருக்கிறது. The Oriental Mystic Myna என்னும் ஆங்கில இதழையும் நடத்தி வந்ததாகத் தெரிகிறது;

செய்யுட் சிறப்பும் அடிகட்குச் சங்கத் தமிழ் நலங்கனிந்து அருட் சாறு நிரம்பித் தனிச் சுவை மிக்கது; 'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை' (1900) 'சோமசுந்தரக் காஞ்சி' (1901) என்பன, அடிகளின் 26ஆம் ஆண்டுக்குமுன் மலர்ந்தவை; ஆங்கிலத்திற் செய்யுள் இயற்றும் ஆற்றலும் அடிகளார் பெற் றிருந்தார்கள்; கல்கத்தா, 'சுரேந்திரநாத் பானர்ஜி'யின் திறங்கள் பற்றிச் செய்யுள் செய்திருப்பதை நினைவுகூரலாம்.

செய்யுட்களுக்கு உரைவகுக்குங் கலையினிமைக்குத் 'துகளறு போதம் உரை' (1897) முல்லைப்பாட்டு (1903), பட்டினப்பாலை

ஆராய்ச்சியுரை, (1903, 1906), திருவாசக விரிவுரை (1948) முதலியன சான்று.

கட்டுரை வன்மைக்குச் சிறுவர்க்கான செந்தமிழ் (1934), இளைஞர்க்கான இன்றமிழ் (1957), அறிவுரைக் கோவை (1971), உரைமணிக் கோவை (1972) முதலியனவும்,

கதை யழகுக்குக் கோகிலாம்பாள் கடிதங்கள் (1921) முதலிய தனித்தமிழ்ப் புதினங்களும்,

நாடகக் கவினுக்கு அம்பிகாபதி அமராவதி நாடகமும் (1954),

ஆராய்ச்சி வகைக்கு 'முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவர்' (1936), 'சாகுந்தல நாடக ஆராய்ச்சி' (1934), 'திருக்குறளாராய்ச்சி', 'சிவஞான போத ஆராய்ச்சி' (1958), முதலியனவும்,

மொழிபெயர்ப் பாற்றலுக்கு ஆங்கிலத்திலிருந்து பெயர்த்த 'சிந்தனைக் கட்டுரைகள்' (1905) 'குமுதவல்லி அல்லது நாக நாட்டரசி' (1911), சமக்கிருதத்திலிருந்து பெயர்த்த 'சாகுந்தல நாடகம்' (1907), முதலியனவும்,

சீர்திருத்தச் சிறப்புக்குச் 'சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்' (1923), 'வேளாளர் நாகரிகம்' (1923), 'பொருந்தும் உணவும் பொருந்தா உணவும்' (1921) போன்ற பலவும் எடுத்துக்காட்டுகள்.

இத்தனைக் கலைக் கோலங்கள் தமிழகத்தில் அடிகளார் ஒருவரிடமே மலர்ந்திருந்தமை, அவர்களிடம் விளங்கிய தெய்வக் கலையொளியை இனிது புலப்படுத்தும்.

---

## நோன்பியற்றும் அறை

நோன்பியற்றும் அறையில் இரவிவர்மரைப் போன்ற சிறந்த ஓவிய ஆசிரியர்களால் வரையப்பட்டுத் தேவவடிவங்களும், முனிவர்கள் சமய குரவர்கள், அடியவர்கள் புலவர்கள் அரசரின் உயர்ந்தோர்களின் வடிவங்களுந் திருத்தமாய் அமைந்த ஓவியங்களையே தெரிந்தெடுத்து, அவற்றின் தலைப்புறத்தை முன் சாய்த்துச் சுவர்களிற் சூழ நிறுத்துக.

அவ்வறை அமைதியான இனிய மணம் நிறைந்து கமழ்வதாய் இருத்தல் வேண்டும். அகில், சந்தனம், கோட்டம், துருக்கம், தகரம், பச்சைக் கருப்பூரம், புழுகுநெய் முதலான மணப்பண்டங்கள் கலந்த கூட்டுகள் புகைத்தலாலும் மருகு, மருக்கொழுந்து, விலாமிச்சை, வெட்டிவேர் முதலான பூடுகளையும், மகிழ் மல்லிகை, பிச்சி, செங்கழுநீர், சண்பகம், அல்லி, குவளை, தாமரை முதலான பூக்களையும் அவ்வறையுள் வைத்து வழிபடும் இறைவன் திருவுருவத்திற்கு நாடோறும் அணிதலாலும் அவ்விடம் என்றும் மணங் கமழ்வதாய் இருக்கும்.

—மனிதவசியம்.

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

(முன் ௩சச௯ ஆம் பக்கத் தொடர்ச்சி)

முல்[3] — மென்மைக் கருத்து வேர்ச்சொல்.

எல்லா உயிரினங்கட்கும், இளமையிற் பெரும்பாலும் உடல் மென்மையாயிருப்பது இயல்பே. மாந்தரினத்துள், ஆடவனினும் பெண்டு மெல்லுடம்பியாயினும், குழவிப் பருவத்தில் இருபாலும் ஒரு நிகரான மென்மையாகவேயிருத்தல் காண்க.

பச்சிளமையிலும் சிற்றிளமையிலும் உடம்பும் தன்மையும் மென்மையாயிருப்பதால், இளமைக் கருத்தினின்று மென்மைக் கருத்துத் தோன்றிற்று. மென்மை அதையுடைய பொருளுக் கேற்றவாறு பலதிறப்படும்.

முல் — மெல் = மெதுவான "ஆம்பல் மெல்லடை கிழிய" (அகம். 56).

மெல் — மென்மை = 1. மெதுவுத் தன்மை. "கயவென் கிளவி மென்மையுஞ் செய்யும்" (தொல். உரி. 24). 2. வலியின்மை. "மேவற்க மென்மை பகைவ ரகத்து" (குறள். 877). 3. மெல்லெழுத்து. "மேவு மென்மை மூக்கு" (நன். 75). 4. அமைதி. "மெல்லிய நல்லாருள் மென்மை" (நாலடி 188). 5. தாழ்வு. "மென்சொ லேனும்...இகழார்" (கந்தபு. அவையட. 3). 6. சிறுமை, நுண்மை.

மெல்ல = 1. மெதுவாக, சிற்றளவாக. "தாஞேக்கி மெல்ல நகும்" (குறள். 1094). 2. அமைதியாக, அடக்கமாக. "மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி" (புறம். 73).

க. மெல்லனெ, தெ. மெல்லகா (ᵹ).

மெல்லென = மெல்ல.

மெல்லெனல் = 1. மெத்தெனற் குறிப்பு. "மெல்லென் சீறடி" (தொல். கற். 5). 2. குரல் தாழ்த்திப் பேசற் குறிப்பு. "மெல்லெனக் கிளந்தனமாக" (பொருந. 122). 3. மந்தக் குறிப்பு. (சூடா.).

மெல்லன் = மெல்லிய தன்மையன்.

மெல்லடை = மெல்லிய அடை, அப்ப வகை. (பிங்.).

மெல்லணை = 1. மெத்தை. "மெல்லணை மேல் முன் துயின்ருய்" (திவ். பெருமாள். 9:3). 2. சட்டை. (சூடா.).

மெல்லரி = உயர்ந்த சிறிய அரிசி வகை. "உலை தந்த மெல்லரி" (திருமந். 422).

மெல்லம் புலம்பு = மணலால் மெல்லிய நெய்தல் நிலம். (திருக்கோ. 379, உரை).

மெல்லி = மெல்லியலுடைய பெண். "மெல்லி நல்லாள் தோள் சேர்" (ஆத்திசூ.).

மெல்லிக்கை = சிறியது, பருமனற்றது. (W.).

மெல்லிது = 1. மென்மையான பொருள். "மலரினும் மெல்லிது காமம்" (குறள். 1289). 2. ஒல்லியானது. 3. சிறியது.

மெல்லிது — மெல்லிசு. மெல்லிதரம் — மெல்லிசரம்.

மெல்லிசை = மெதுவான ஓசை.

மெல்லிசை வண்ணம் = மெல்லெழுத்து மிகுந்துவரும் செய்யுளோசை. "மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே." (தொல். செய். 215).

மெல்லியல் = 1. மென்மையான இயல்பு. "மெல்லியற் குறுமகள்" (குறுந். 89). 2. பெண். "மெல்லிய லாக்கை முற்று நடுங்கினள்" (கம்பரா. மாயாசனக. 18). 3. இளங் கொம்பு. (சூடா.).

மெல்லியர் = 1. வலிமை யில்லாதவர். "தேவர் மெல் லியர்" (கம்பரா. யுத்த. மந்திரப். 32). 2. உடல் மெலிந் தவர். (W.). 3. எளியவர் "எச்சத்தின் மெல்லியராகி" (நாலடி. 299). 4. புல்லிய குணமுடையவர். "மடவர் மெல்லியர் செல்லினும்" (புறம். 106). 5. பெண்டிர். (W.).

மெல்லியலாள் = பெண். "மெல்லியலா ளொடும்பாடி" (தேவா. 284 : 8).

மெல்லியன் = அறிவு குன்றியவன். (புறம். 184).

மெல்லினம் = மெல்லொலியுடைய மெய் யெழுத்துக்கள். (நன். 69).

மெல்லெழுத்து = மெல்லின மெய். "மெல்லெழுத் தென்ப ஙஞண நமன." (தொல். நூன். 20).

மெல்லொற்று = மெல்லின மெய் "மெல்லொற்றுத் தொடர் மொழி" (தொல். குற்றிய. 9).

மெல்வினை = பணி (சரியை) பத்தி (கிரியை) என்னும் மத வினைகள். "எளிதானவற்றை மெல்வினையே யென்றது" (திருக்களிற்றுப். 17).

ஒ - நோ : மெல் :—

*E. mellow*, soft, *OE*, *mela*, *melw*, *GK. melakos*, soft.

*L. mollis*, soft; *molluscus*, soft-bodied animal; *mollusca*, sub-kingdom of soft-bodied animals. *F. mollusque*, *E. mollusc.*

*L. mollificare*, make soft; *F. mollifier*, *E. mollify*. *Rom. molliare*, *OF. mollier*, moisten, *E. moil*.

*E. mild*, gentle; *OE. milde*, *OS. mildi*; *OHG. milt*; *ON. mildr*; *Goth.* milds.

மென்கண் = இரக்கம். "மென்கண் பெருகி னறம் பெருகும்" (நான்மணி. 92).

மென்கணம் = மெல்லின மெய்கள். (நன். 158, உரை).

மென்கால் = மென் காற்று, தென்றல். "மென்காஸ் பூவளவிய தெய்த" (கம்பரா. வனம்புகு. 2).

மென்சொல் = 1. இனிய சொல். (நாமதீப. 668). 2. அன் பான சொல். (W.).

மென்பறை = பறவைக் குஞ்சு. "மென்பறை விளிக்குரல்" (ஐங்குறு. 86).

மென்பால் = மருத நிலம். "வளம் வீங்கிருக்கை...மென் பாரேறும்" (பதிற்றுப். 75 : 8).

மென்பிணி = சிறுதுயில். "மயக்கத்துப் பொழுது கொண் மரபின் மென்பிணி யவிழ' (பதிற்றுப். 50 : 21).

மென்புரட்டு = கைம்மாற்றிலே பணம் புரட்டுகை. (யாழ். அக.).

மென்புலம் = 1. நீர் வளத்தால் மெல்லிய மருத நிலம். "மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந" (புறம். 42). 2. மணலால் மெல்லிய நெய்தல் நிலம். "மென்புலக் கொண கன்" (ஐங்குறு. 119).

மென்றொடர் = மெல்லின மெய்யை ஈற்றயலாகக் கொண்ட சொல். "வன்றொடர் மென்றொடர்" (தொல். குற்றிய. 1).

மென்னகை = புன்சிரிப்பு. "கவர்தலைச் சூலி மென்னகை விளைத்து" (உபதேசகா. சிவவிரத. 163).

மென்னடை = மெதுவான நடை. "மென்னடை யன்னம் பரந்து விளையாடும்" (திவ். நாய்ச். 5 : 5). 2. அன்னம். (பிங்.).

மென்னிலை = நடன நளிநயக் கை வகை (W.).

மென்மெல = மெல்ல மெல்ல. "மென்மெல வியனி வீதி போந்து" (பெருங். வத்தவ. 17 : 99).

மெல் — மெல்கு. மெல்குதல் = 1. மெதுவாதல். "காலின் மென்மைக்குத் தக்கபடி தானும் மெல்கிற்றிலள்" (சிலப். 15 : 138, அரும்.). 2 நொய்யதாதல். "மெல்கிடுகவள வல்கு நிலை புகுதரும்" (அகம். 56.). 3. இளகுதல்.

ஒ - நோ :—

*E. melt*, become or make soft by liquifying by heat; *OE. meltan, mieltan, ON. meta* (digest).

*E. molten* (melted).

*E. smelt*, extract metal from ore by melting).

*MDu.* or *MLG*, smelten.

*E. melt*, melted metal,

E. *malt, OE. mealt, OS. malt, OHG. malz, ON. malt*, cog. w. *melt*.

மெல்(லு)தல் = 1. கடின அல்லது விழுங்க முடியாத உணவைப் பல்லால் அரைத்து மென்மையாக்குதல் "மெல்லிலைப் பண்டியும்" (சீவக. 62). 2. விடாது கடிந்து தொல்லைப் படுத்தல், இரவும் பகலும் என்னை மென்று கொண்டிருக்கின்றான். (உ. வ.).

ஒ. நோ : *Goth. mel*, grind; *malma*, sand; *ON. malmr*, ore; *E. malm*, soft chalky rock; *OE. mealm*, cog. w. *OS., OHG. melm*, dust,

E. *meal, OE. mela, OS., OHG. melo, ON. mjol*, cog. w. L. *molere, grind, E. mill*, building fitted with machinery for grinding corn.

*OE. mylen, OS. mulin, OHG. muli(n) f. LL. molinum, L. mila*, mill f. *mole*, grind.

E. *molar*, grinder (mammal's back teeth serving to grind) f. L. *molaris* (*mela*, millstone)

E. *mull* (Sc.), snuff box (var. of *mill*), box originally having a grinder.

*E. muller*, tool used for grinding powders etc. on slab.

*ME. mol, mulour* f. *mul*, grind.

*E. mullock* (Austral.), refuse from which gold has been extracted, f. dial. *mull*, dust, rel. to *OE. mgl*, dust, *MDu. mul, mol* f. *Gme* root *mul*,- grind.

*E. multure*, toll of grain or flour paid to muller.

*ME.* or *OF. milture f.* med. *L. molitura* f. *molere*, grind.

மெல் — மென் — மெள்ள = மெல்ல. "மெள்ள வெழுந்தரி யென்ற பேரரவம்" (திவ். திருப்பா. 6).

மெள் — மெள்ளென = மெல்லென. "மெள்ளெனவே மொய்க்கு நெய்க்குடந் தன்னை யெறும்பு" (திருவாச. 6 : 24).

மெள் — மெள்ளம் = விரைவின்மை. மெள்ளமாய்ப் போ. (உ. வ.)

மெல் — மெலி. மெலிதல் = 1. வலி குறைதல். 2. உடல் இளைத்தல். "ஆக்கையைப் போக்கப் பெற்று மெலிகின்ற என்னை" (திருவாச. 6 : 10). 3. எளியராதல். (W.). 4. வருந்துதல். "அளப்பினுள் மெலிகிற்பாள்" (காசிக. மகளிர். 8). 5. கெடுதல். "மெலியு நம்முடன் மேல்வினையானவே" (தேவா. 318 : 10). 6. வல்லெழுத்து இனமெல்லெழுத்தாக மாறுதல். "குழைத்த வென்பது குழைந்தவென மெலிந்து நின்றது" (புறம். 21, உரை). 7. முரலில் (சுரத்தில்) தாழ்தல். "யாழ்மேற் பாலை யிடமுறை மெலிய" (சிலப். 3 : 92).

மெலிவு = 1. தளர்ச்சி. "அணியிழை மெலிவின்" (பு. வெ. 11. பெண்பாற். 5). 2. களைப்பு "மெலிவு தீர்தி" (கம்பரா. திருவடி. 5). 3. பாடு. "எங்களுக் குண்டான மெலிவுகளுஞ் சொல்லி" (Insc. Pudu. 799). 4. துன்பம். 5. தோல்வி. "மெலிவென்பது முணர்ந்தேன்" (கம்பரா. முதற்போ. 181). 6. கொடுமை. "வலியவர் மெலிவு செய்தால்" (கம்பரா. வாலிவ. 80). 7. சமனுக்குக் கீழ்ப்பட்ட ஓசை. "வலிவும் மெலிவுஞ் சமனு மெல்லாம்" (சிலப். 3 : 93).

மெலித்தல் = செய்யுள் திரிபுகள் ஆறனுள், வல்லெழுத்து இனமெல்லெழுத்தாக மாறுதல் அல்லது மாற்றப் படுதல். (நன். 155).

மெலிந்தோன் = 1. வலியற்றவன். 2. நோய்ந்தவன். 3. ஏழை.

மெலிப்பு = 1. மெலித்தல், மெலியச்செய்தல். 2. மெல்லெழுத்து "வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலும்" (தொல். தொகை. 15).

மெலியவன் = வலியற்றவன். மெலியவர் பாலதேயோ வொழுக்கமும் விழுப்பந்தானும்" (கம்பரா. வாலிவதை. 80).

மெலியார் = வலியற்றவர். "மெலியார்மேன் மேகபகை" (குறள். 861).

மெலிகோல் = கொடுங்கோல், "மெலிகோல் செய்தே னாகுக" (புறம். 71).

மெல் — மெலு = எடைக் குறைவான காசு. (W.).

மெலு — மெலுக்கு = மென்மை. (W.).

மெலுக்கு — மெலுக்குவை = மென்மை. (W.).

தெ. மெலக்குவ.

மெலு—மெது. ல—த, போலித்திரிபு. ஒ. நோ:
சலங்கை—சதங்கை, கலம்பம்—கதம்பம்.

மெது=1. மென்மை. 2. வேகமின்மை. 3. அமைதி. (W.). 4. மந்தம். 5. மழுக்கம்.

க. மெது. வ. ம்ருது.

ஒ. நோ: *E. smooth, OE. smooth* (once usu, *smethe*, whence dail. *smeeth*).

நாகம் என்னும் தமிழ்ச்சொல் *snake* என்று செருமானிய மொழிகளில் சகர முதன்மிகையொடு வழங்குவது போன்றே, மெது வென்னும் சொல்லும் வழங்குகின்றதென்க.

தமிழ்ச் சொற்களின் மகரவுறுப்பின் பின் ரகரத்தை இடைச் செருகுவது சமற்கிருத இயல்பே.

எ—டு: அமுது (சோறு)—அம்ருத, மடி—மரி—ம்ரு, மிதி—ம்ருத்,

சென்னைப் ப. க. தமிழ் அகரமுதலியில், ம்ருது என்னும் சமற்கிருதச் சொல்லினின்று மெது என்னும் தென்சொல் திரிந்துள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது.

மெது மெதுத்தல்=மெதுவாயிருத்தல். (W.).

மெதுமெதுப்பு=மெதுத்தன்மை. (W.).

மெது—மெதுக்கு=சோறு. (W.).

தெ. மெதுக்கு.

அரிசி அவிந்தபின் மெதுவாயிருத்தல் காண்க.

மெதுக்கிடுதல்—மெதுவாயிருத்தல்.

மெதுகு=மென்மை. மெதுகரம்=நுண்ணிய வேலைப்பாட்டில் மெதுவாக அராவும் சன்ன அரம்.

மெதுகாணி (மெதுகு+ஆணி)=மெருகிடும் ஒரு கருவி.

மெதுவடை=மெதுவாயிருக்கும் உழுந்து வடை.

மெது—மெத்து—மெத்தென=மெதுவாக.

மெத்தெனல்=1. மென்மைக் குறிப்பு. "மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி" (திவ். திருப்பா. 19). 2. அமைதிக்குறிப்பு. 3. காலத் தாழ்ச்சிக் குறிப்பு. "மெத்தென மாதைக் கொண்டு வருகுவல்" (திருவாலவா. 62 : 7). 4. மந்தக் குறிப்பு. (ஈடு, 1 : 10 : 11). க. மெத்தனெ.

மெத்தெனவு=1. அமைந்த குணம். 2. வளைந்து கொடுக்குந் தன்மை. 3. கவலையின்மை.

மெத்தெனவு — மெத்தனவு = 1. காலத்தாழ்ப்பு. 2. கவலையின்மை. "மெத்தனவிற்றுயிலுங்கால்" (திருவாலவா.27 : 70).

மெத்தனவு — மெத்தனம் = 1. காலத்தாழ்ப்பு. 2. கவலையின்மை, பொருட்படுத்தாமை.

மெத்து — மெத்தை = மெதுவான படுக்கை. "ஒரு பாம்பை மெத்தையாக விரித்து" (திவ். பெரியாழ். 5 . 1 : 7). "கனக தண்டி மேலுக்குப் போட மெத்தையில்லை யென்பார்க்கும்" (தனிப்பா.). 2. பஞ்சணை. 3. துயிலிடம், (திவா.). 4. சட்டை, (பிங்.). 5. வேட்டையாடுவோர் தோளிலிடும் அணை. "வலத் தோளிலே இட்ட மெத்தையும்" (திவ். திருநெடுந். 21, வ்யா. பக். 170).

ம., தெ. மெத்த, க. மெத்தெ.

மெத்தைக் கட்டில் = மெதுவணை பரப்பிய கட்டில்.

மெத்தைச்சட்டை = பஞ்சு உள்வைத்துத் தைத்த சட்டை.

மெத்தைப் பாய் = மெத்தைமேல் விரிக்கும் பட்டுப் பாய்.

ம. மெத்தப் பாயி.

மெதுகு — மெருகு. ஒ. நோ: விதை. விரை.

மெருகு = மெதுவான பளபளப்பு.

ம, தெ., க., து. மெருகு (g).

மெதுகரம் — மெருகரம் = மெருகு வேலையிற் பயன்படும் அரவகை. (C.G.).

மெதுகாணி — மெருகாணி = மெருகுவளை யென்னும் தட்டார் கருவி. மெருகிடுதல் = பளபளப்பு உண்டாக்குதல். (W.).

மெருகுக் கல் = மெருகிட உதவுங் கல். (C.E.M.).

மெருகுச் சுண்ணம்பு = சுவரிற் பூசும் சிப்பிச் சாந்து போன்ற நுண்ணிய சுண்ணச் சாந்து.

மெருகு தேய்த்தல் = மெருகிடுதல்.

மெருகு போடுதல் = மெருகிடுதல்.

மெருகு மண் = தட்டார் மெருகிடுதற் குதவும் மண் வகை.

மெருகு வளை = மெருகிட உதவும் தட்டார் கருவி வகை.

மெருகெண்ணெய் = 1. பளபளப்பிற்காக மரப்பண்டங்களின் மேற் பூசும் எண்ணெய். (W.). 2. மினுக்கெண்ணெய். (யாழ். அக.).

மெருகோடு = மேற்புறத்திற் பளபளப்புள்ள ஓடு. (C.E.M.).

மெல்கு — மெழுகு = 1. மெதுத்தன்மை. (அழகர்கல. 10). 2. இளகிய அல்லது களிப்பதமான மருந்து. 3. அரக்கு.

"மெழுகான்றூதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி" (குறுந். 155). 4. ஆவின் சாணம். "துய்ய மெழுகுடன்" (திருமந். 1720). 5. சந்தனம்.

மெழுகு செய்தல்=மெதுவாக்குதல். புரவி கருவிகொடுரிஞ்சிமிக மெழுகு செய்து" (அழகர்கல. 10).

மெழுகுதல்=1. மேனியிற் சந்தனம் பூசுதல். "முகிண்முலை மெழுகிய சாந்தின்" (கப்பரா. பிணிவீ. 53). 2. நிலத்தைச் சாணமிட்டுத் துப்புரவு செய்தல். "நின்றிருக் கோயி றூகேன் மெழுகேன்" (திருவாச. 5 : 14). 3. குற்றத்தை மறைத்துப் பேசிவிடுதல்.

மெழுகு—மெழுக்கு=1. சாணத்தால் மெழுகுகை. "புலர்வதன் முன் னலகிட்டு மெழுக்குமிட்டு" (தேவா. 727 : 3). 2. சாணம். "திருவலகும் திருமெழுக்கும் தோண்டியுங் கொண்டு" (பெரியபு. திருநாவுக். 68). 3. மேற் பூச்சுப் பொருள் "வேரியின் மெழுக்கார்த்த மென்பூ நிலத்து" (சீவக. 129). 4. அரக்கு. 5. பிசின்.

ம. மெழுக்கு.

மெழுக்கு—மெழுக்கம்=சாணத்தால் மெழுகிய இடம். "மலரணி மெழுக்க மேறி" (பட்டினப். 248).

மெழுக்குச் சாத்துதல்=சாணமிட்டு நிலத்தைத் துப்புரவு செய்தல்.

மெழுக்குத்துணி=1. மெழுகு பூசின துணி. 2. நீர்க் காப்புத் துணி. 3. நிலக்கரி நெய்யிட்ட போர்வை (Tarpaulin).

மெழுக்கூட்டுதல்=மேற்பூச்சிடுதல்.

மெழுகிடுதல்=1. நூலின்மேல் மெழுகு பூசுதல். 2. சாண மிட்டு நிலத்தை அல்லது திண்ணையைத் துப்புரவு செய்தல். 3. படிமை வார்க்க மெழுகினுற் கருக்கட்டுதல்.

மெழுகுக் களிம்பு=சிரங்கிற் கிடும் களிம்பு மருந்து வகை.

மெழுகு கட்டுதல்=படிமை வார்க்க மெழுகினுற் கருக் கட்டுதல்.

மெழுகு கட்டி வார்த்தல்=மெழுகுக் கருவில் உருக்கின மாழைகளை (உலோகங்களை) வார்த்துப் படிமை யமைத்தல்.

மெழுகு சாணை=1. மெழுகால் துடைத்த உரைகல். 2. மெழுகுங் கருமணலுங் கலந்து செய்த சாணைக் கல். (W).

மெழுகு சாத்துதல்=படிமை வார்க்க மெழுகினுற் கருக் கட்டுதல். "சிற்பர்களான் மெழுகு சாத்தி" (திருவாலவா. 45 : 2).

மெழுகு சீலை=மெழுக்குத் துணி.

மெழுகி சேர்வை = மெழுகுக் களிம்பு. (W.)

மெழுகுத்தண்டு = மெழுகுத் திரி. (யாழ். அக.).

மெழுகுத்திரி = மெழுகு திரி.

மெழுகுத் துணி = மெழுக்குத் துணி.

மெழுகு பதம் = காய்ச்சப்பட்ட மருந்தெல்லாம் சேர்ந்து மெழுகுபோல் திரண்டுவரும் பதம்.

மெழுகு பணியன் = அம்மைநோய் வகை. (யாழ். அக.)

மெழுகு பாகல் = பாகல்வகை. (மூ. அ.).

மெழுகு பாளம் = மெழுகுத் தகடு.

மெழுகு பீர்க்கு = பீர்க்குவகை. (உ. வ.)

மெழுகு பூச்சு = படிமைமேல் மெழுகு பூசியெடுக்கும் அச்சு.

மெழுகு பொம்மை = மெழுகினாற் செய்த விளையாட்டுப் படிமை. 2. மெய்வருத்தந் தாங்கமுடியாதவ-ன்-ள்.

க. மேனது பொம்பெ (b.).

மெழுகு போடுதல் = மரப் பண்டங்கட்குப் பளபளப்பேற்ற மெழுகைக் காய்ச்சிப் பூசுதல், (W.).

மெழுகுமண் = கருக்கட்டும் பசைமண். (W.)

மெழுகு முட்டம் = மெழுகு பாளம். (இடவழக்கு).

மெழுகெண்ணெய் = மரப்பண்டங்கட்கு மெருகிட உதவும் மெழுகு சேர்த்த பூச்செண்ணெய். (இ. வ.).

மெழுகெழுதுதல் = துணியில் அச்சடிக்க மெழுகால் உருவ மெழுதுதல். (இ. வ.).

**கவனிப்பு :**

முந்தின கட்டுரையில், முந்து + ஈயினோர் = முந்தீயினோர் என்றிருப்பதை, முந்தி + ஈயினோர் = முந்தியீயினோர் — முந்தீயினோர் என்று திருத்திக் கொள்க.

முந்தீயினோர் என்பதில் ஈதல் தலைமை வினையும், முந்தியீயினோர் என்பதில் ஈதல் துணைவினையும், ஆகும்.

ல ள ழ என்னும் மூன்று இனவொலிகளுள், முந்தியது லகரமே. 'ல' திரண்டு ளகரமும், 'ள' திரண்டு ழகரமும், ஆகும்.

எ-டு : கால் — காள் — காழ் (கருமை).

லகரம் நேரடியாய் ழகரமாவதுமுண்டு.

எ-டு : மால் — மழை.

இனி, இத்தகைய சொற்றிரிவுகளில், இடைப்பட்ட ளகரச் சொல் இறந்துபட்ட தெனினுமாம்.

———

# சங்கநூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(பரல்-கூ, உ௫கூ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 12. வாளை

வாளை என்றொரு மீனைப்பற்றியும் சங்க நூல்களில் மிகப் பல பாடல்கள் கூறியுள்ளன.

"நெடுங்கழைத் தூண்டி னடுங்கநாண் கொளீஇக்
கொடுவா யிரும்பின் மடி தலை புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை
நீர்நணிப் பிரம்பி னடுங்குநிழல் வெரூஉம்
நீத்துடை நெடுங்கயந் திப்பட மலர்ந்த"
— பெரும்பாணாற்றுப்படை, வரி 285 - 289

"கண்புமலி பழனங் கமழத் துழைஇ
வலையோர் தந்த விருஞ்சுவல் வாளை"
—மலைபடுகடாம். 454 - 455

"சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்" —அகம். 6

"மாலிரு ணடுநாட் போகித் தன்னையர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்" —அகம். 126

"நாளிரை தரீஇய வெழுந்த நீர்நாய்
வாளையொ டுழப்பத் துறைகலுழ்ந் தமையிற்" —அகம். 336

"பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து
வாளை நாளிரை தேரு மூர" —அகம். 386

"நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரை" —அகம். 276

"உண்டுறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளை பிறழும் ஊரற்கு நாளை" —நற்றிணை. 310

"படைமாண் பெருங்குளம் மடைநீர் விட்டெனக்
காலணைந் தெதிரிய கணைக்கோட்டு வாளை
அள்ளலங் கழனி உள்வாய் ஓடிப்
பகடுசே றுதைத்த புள்ளிவெண் புறத்துச்
செஞ்சால் உழவர் கோற்புடை மதரிப்
பைங்காற் செறுவின் அணைமுதற் புரளும்" —நற்றிணை. 340

"வாளை வாளின் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்" —நற்றிணை. 390

"நெல்விளை கழனி நேர்கண் செறுவின்
அரிவனர் இட்ட சூட்டயல் பெரிய
இருஞ்சுவல் வாளை பிறழும் ஊர" —நற்றிணை. 400

"கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்" —குறுந்தொகை. 8

"கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு
துணர்த்தேக் கொக்கின் தீம்பழங் கதூஉம்"
—குறுந்தொகை. 164

"அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூரன்" —குறுந்தொகை. 364

"பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூர" —ஐங்குறுநூறு. 63

"நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்
பூக்கதூஉ மினவாளை" —புறம். 18

"பெருவிறல் யாணர்த் தாகி யரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்" —புறம். 42

"மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட
பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்
புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக
விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி" —புறம். 61

"கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்
கணைக்கோட்டு வாளை மீநீர்ப் பிறழ" —புறம். 249

"ஒண்செங் குரலித் தண்கயங் கலங்கி
வாளை நீர்நாய் நாளிரை பெறூஉப்" —புறம். 283

"நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளும்" —புறம். 287

"இருஞ்சுவல் வாளை பிறழு மாங்கட்
டண்பணை யாளும் வேந்தர்க்கு" —புறம். 322

"வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
கயலார் நாரை யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை யொய்யும்" —புறம். 354

"குறுமுயலின் குழைச்சூட்டொடு
நெடுவாளைப் பல்லுவியற்" —புறம். 395

"நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை" —சிலம்பு 10 - 79

"கழனிவந்து கால்கோத்தெனப்
பழனவாளை பாளையுண்டென" —பரிபாடல் 7 : 33 : 34.

"கருங்கயத் தாங்கட் கழுமிய நீலம்
பெரும்புற வாளைப் பெடைகதூஉ மூரன்"
—திணைமொழி ஐம்பது. 39.

சங்க நூல்களில் மற்றெல்லா மீன்களையும்விட வாளையைப் பற்றியும் வராலைப் பற்றியும் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளன. வாளை மீனும் வரால் மீனும் மிகவும் சுவையுடையவை யாதலாலும், பிடிப்பது சிறந்த வேட்டையாதலாலும் பல பாடல்களில் கூறப்பட்டன. நன்னீரில் கிடைக்கும் மீன்களில் வாளையும் வராலும் பெரிய அளவினதாக வளரும். வாளைமீன் குளங்களிலும ஏரிகளிலும் வளரும் நன்னீர் மீனுகும். செடிகளும் கொடிகளும் புற்களும் உள்ள நீரிலேயே வாழும். சங்க நூல்களிலும் நீர்நணிப் பிரம்பும், கணம்புல்லும், வள்ளைக் கொடியும், செங்குரலிக் கொடியும் இருந்த பொய்கையிலும் கயத்திலும் நீர் நிறைந்த கழனியிலும் குளத்திலும் வாளைமீன் வாழ்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. வாளை மீனைக் கணைக்கோட்டு வாளையென்று சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது. வாளைமீன் திரண்டு, நீண்டு உள்ளதால் கணைக்கோட்டு வாளை எனப்பட்டது. வாளைமீனின் வாய் தனித்தன்மை வாய்ந்தது. வாளைமீனின் வாய் ஆழமாக, பிளந்ததுபோல இருக்கும். இவ்வாறு இருப்பதால் (Cleft of mouth deep, extending to below of even behind the eyes.) இதன் கண்ணிற்கும் பின்னல் வாயின் பிளப்பு தெரியும். இதன் காரணமாகவே வாளைமீனின் வாயை முடக்கு மோதிரத்திற்கு ஒப்பிட்டு நூல்கள் கூறியுள்ளன.

"வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்
செவ்விரற் றொளீஇய செங்கேழ் விளக்கத்துப்"
—நெடுநல்வாடை - 143 - 144.

வாளையின் திறந்த வாயை ஒப்ப முடக்குமோதிரம் இருந்ததாக நெடுநல்வாடை கூறியுள்ளது. சிலப்பதிகாரத்திலும் 'வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்' என்று கூறப்பட்டுள்ளது. நற்றிணையிலும் இந்த உவமை பயில்கின்றது.

"சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
வாழை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்" —நற்றிணை, 120.

இந்த நற்றிணைப் பாடலில் வரும் வாழை என்ற பாடம் சரியானதன்று. வாளை என்றிருக்க வேண்டும். ஔவை துரைசாமிப் பிள்ளையவர்களின் பதிப்பில் வாளை என்றே உள்ளது. மெல்

விரலில் செறித்த மோதிரத்திற்கும் வாளை வாயே பொருத்த மான உவமையாகும் மரபு தழுவியதாகும். வாழை என்று கொண்டது பொருத்தமற்றது. முடக்கு மோதிரத்துடன் வாளை மீனின் பகுவாயை ஒப்பிட்டது சிறப்பான, பொருத்தமான உவமையாகும். வாளையின் பகுவாய் ஆழமாகப் பிளந்திருப் பதுடன் அடிவாய் மேல்வாயைவிடச் சிறிது நீண்டு இருக்கும். (Cleft of the mouth extending to about one diameter behind the orbit, the lower jaw being slightly longer.) முடக்கு மோதிரமும் அவ்வாறு இருப்பதைக் காணலாம். 'இருஞ்சுவல் வாளை' என்றும் சில பாடல்கள் கூறியுள்ளன. கரிய தோளுடைய வாளை யென்றது அதன் தோள் பாகத்தில் காணும் பழுப்பு நிறத்தைக் குறிக்கலாம். வாளை மீன் நன்னீர் மீன்களில் மிக நீளமானதாகவும் பெரிதாகவும் வளரும். ஆதலின் 'நெடுவாளை' என்றும் 'பெரும்புற வாளை' என்றும் சங்க நூல்களில் அழைக்கப்பட்டுள்ளது வாளைமீன் உருவில் ஒரு வாளைப்போலத் தோன்றும். வாளைமீனின் அடிப்பக்கத்தில் அமைந்துள்ள நீண்ட ஒழுங்கான செதிலின் அமைப்பு வாளின் தீட்டப்பட்ட கரிய பாகத்தைப் போலத் தோன்றுகின்றது. அதனால் வாளை என்று அழைத்தது மிகவும் பொருத்தமே. சங்க நூல்களில் மீன்களை வேல், அயில், கதிர், வாள் ஆகியவற்றோடு ஒப்பிட்டுக் கூறுவதைக் காணலாம். வாளையின் பொதுவான நிறம் வெண்மையாகும். ஆதலின் 'வாளை வெண்போத்து' என்று அகநானூறு அழைத்துள்ளது. ஆனால், அதன் உடலில் வேறு சில நிறங்களும் தெரியும். தலை கருஞ்சிவப் பாகவும் பின்புறம் சாம்பல் கலந்த பழுப்பு நிறமாகவும் பக்கங் களில் வெள்ளிபோல வெண்மையாகவும் தெரியும். வயிற்றுப் பக்கத்தில் வெள்ளி நிறத்தின் கருஞ்சிவப்பு மிளிரும்.

> "பாசடை நெடுங்காடு காணிகொ ணீர்நாய்
> வானவி னிறத்த நெட்டுடல் வாளைப்
> பேழ்வா யொளிப்ப வேட்டுவப் பெயரளி"
>
> —கல்லாடம் - 27 - 19 - 21.

கல்லாடத்தில் வாளைமீனின் உடலில் காணும் வேறு வேறு நிறங்களைக் குறிப்பிட்டே 'வான வில் நிறத்த நெட்டுடல் வாளை' என்று சொல்லப்பட்டுள்ளது.

'வாளைக் கமஞ்சூல் மடநாகு' என்று குறுந்தொகை பெண் வாளைமீனை அழைத்துள்ளது. வாளைப் போத்து என்றும் அகநானூறு கூறியுள்ளது. வாளைமீன் ஆணும் பெண்ணுமாக வாழும் என்று கண்டுள்ளனர். வாளைமீன் தூண்டிலில் அகப் படாது தப்பித்துப் போவதையும், தொங்கிய மாம்பழத்தைக்

கவ்வி உண்பதையும், நீரில் தாழ்ந்த காஞ்சியின் பூவை உண்பதையும் சங்க நூல்கள் கூறியுள்ளன. வாளைமீன் எதையும் விழுங்கும் கடும்பசியுடையது (voracious) என்று கூறுவர். வாளைமீன் பெரும்பாலும் மற்ற மீன்களையும், இருவையும், கிளிஞ்சில், நத்தை போன்ற உயிர்களையும் உண்டு வாழ்வதாகக் கண்டு பிடித்துள்ளனர். வாளைமீனை 'நன்னீர்ச் சுரு' fresh water shark) என்று ஆங்கிலத்தில் அழைப்பர். கடற் சுருவைப்போல பிற மீன்களை நன்னீரில் வேட்டையாடி உண்பதால் அவ்வாறு பெயரிட்டனர். வாளைமீன் பிற மீன்களை வேட்டையாடுதலைச் சுந்தரர் தேவாரப் பாடலும் கூறியுள்ளது. "வாளை பாய மலங்கிளங் கயல் வரிவரால் உகளும் கழனி" (திருப்பனையூர்ப் பதிகம் 87 - 3) என்று சுந்தரர் பாடியுள்ளார். கழனியில் பாய்ந்த வாளையின் வாயிலிருந்து தப்ப மற்ற மீன்கள் குதித்தன என்று கூறப்பட்டுள்ளது.

> "சள்ளை வெள்ளையங் குருகு தானது வாமெனக் கருதி
> வள்ளை வெண்மல ரஞ்சி மறுகியொர்வாளையின் வாயில்
> துள்ளு தெள்ளுநீர்ப் பொய்கைத் துறைமல்கு வாஞ்சியத் தடிகள்"
>
> —திருவாஞ்சியப் பதிகம் 76 - 4.

என்று சுந்தரர் பாடியுள்ளார். வாளைமீன் பிற மீன்களை விழுங்குமென்பதைத் தெரிந்தே சள்ளைமீன் வாளையின் வாயில் விழும் என்று கூறியுள்ளார். சள்ளை என்பது ஒரு மீனின் பெயர் என்று உரை கூறி யிருப்பினும் இப் பெயர் சிறு மீனைக் குறித்து வழங்கிய பெயராகலாம். இக் காலத்தில் வெளவால் சள்ளை என்று பேச்சு வழக்கில கூறுங்கால் சிறிய வெளவால் மீன் என்றே பொருள் தருகின்றது. கடலில் கிடைக்கும் ஒருவகை மீனையும் 'கடல்வாளை' என்றழைப்பர். ஆற்றுவாளைக்கும் கடல் வாளைக்கும் யாதொரு தொடர்புமில்லை. இரண்டும் வேறுவேறு இனமாகும். வாளைமீனை உழவர் தளம்பு என்ற சேறு குத்தியால் தடிந்து அதன் பெரிய கண்ணுடைய துணியலை (துண்டை) புதுநெல்லிற்கு மாருகக் கொடுப்பர் என்று புறநானூறு கூறியுள்ளது. வாளைமீன் மிகவும் சுவையுடைய மீனுகும். குளம், ஏரிகளில் வாழும் நன்னீர் மீன்களில் வாளைமீன் தான் மிகப் பெரியதாக வளரும் ஆறு அடிவரை வளரக்கூடியது. வாளைமீனை வெட்டினுல் பெரிய துளையுடைய துண்டு விழுமென்பது உண்மையே. வாளைமீன் குளத்திலும் ஏரியிலும் தரைமட்டத்தில் காணும் கழிவுகளையும் தின்னுமென்று கூறுவர். இதனுல் சிலர் இந்த மீனை விரும்பி உண்பதில்லை. வாளைமீன் பெரும்பாலும் நீரடியிலேயே வாழும்.

"செங்கண் மேதிகள் சேடெறிந்து தடம்படிதலிற் சேலினத்தொடு
பைங்கண் வாளைகள் பாய் பழனத் திருப்பனையூர்"

—திருப்பனையூர் பதிகம் 87 : 3.

என்று சுந்தரர் பாடியுள்ளார். எருமைகள் நீரில் படிந்து சேற்றை எறிந்ததால் வாளை பாய்ந்ததாகக் கூறியதைக் கவனிக்க வேண்டும். நீரடியில் வாழும் வாளைமீன் நீரில் எருமை படிந்ததும் வெளியேறுவது இயற்கையே. 'ஆரல் சேற்றில் ஒளிப்ப வாளை மீநீர்ப் பிறழ' என்று புறநானூறு கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். வாளையை மேல்நீரில் காண்ப தரிதாகையால் மீநீரில் பிறழ்ந்ததை ஒரு செய்தியாகக் கூறினதாகத் தெரிகின்றது. மீன்களில் சில இனங்கள் மேல் நீரிலேயே வாழும். அவற்றை (Palagic fishes) என்று அறிவியலில் கூறுவர். இதற்குத் தமிழில் 'மீநீர் மீன்கள்' என்று கலைச் சொல்லாக்கம் செய்யலாம்.

வாளைமீன் கெளுத்தி யினத்தைச் சார்ந்த மீனாகும். இந்த மீன்களுக்குச் செதில்கள் உடலில் இரா. உடல் தோல் வழ வழப்பாக இருக்கும். இந்த இன மீன்களைப் 'பூனைமீன்கள்' (Cat fishes) என்று ஆங்கிலத்தில் அழைப்பர். பூனைக்கு இருப்பதுபோல இந்த இன மீன்களுக்கு மீசைகள் உண்டு. நீருக் கடியில் வாழ்வதால் கண்கள் நன்றாகத் தெரியா. ஆதலின் மீசை போன்ற உணர்வு இழைகள் சூழ்நிலையை அறிந்து கொள்ள உதவுகின்றன. பெருங்கதையிலும் சிந்தாமணியிலும் வாளைமீனைப்பற்றி ஒரு செய்தி வருகின்றது.

"வரியகட் டலவன் வள்ளுகி ருற்றெனக்
கன்னி வாளை யுண்ணு தொடுங்கும்"

—பெருங்கதை 1 : 58-100-101.

"வண்டுவாழ் கொடுந்துறைக் கன்னி வாளைமேல்
நண்டுகி ருற்றென நடுங்கி நாணினல்
விண்டொளித் தூண்டுறந் தொடுங்கும் வீழ்புனல்"

—சீவகசிந்தாமணி 1443.

நண்டின் நகம் பட்டதால் கன்னி வாளைமீன் நடுங்கி நாணத்தால் ஒளித்து உண்ணாது ஒடுங்கும் என்று சிந்தாமணியில் கூறப்பட்டுள்ளதானது தற்குறிப்பேற்றமாகத் தெரிகின்றது. ஆனால் இந்தத் தற்குறிப்பேற்ற அணியிலும் ஒரு நுண்ணிய உண்மை இருப்பதை உணர வேண்டும். வாளைமீனிற்குப் பார்வை குறைந்திருப்பதால் தொடு உணர்வு மிக உள்ளது என்று அறிவியலார் கண்டுள்ளனர். (The eyes are disproportionately small and poorly developed. The absence of good sight is counterbalanced by an exaggerated sense of touch-

'The common food fishes of the Madras State.') வாளை மீனிற்குப் பார்வை குறைவாகையால் உற்றுணர்வு மிகுதியாக இருக்கின்றது. அதனால் நண்டுகிர் உற்றதும் நடுங்கியதாகவும் ஒளிந்து ஒடுங்கியதாகவும் கூறியதில் ஒரு நுட்பமான செய்தியை அறிந்துகொள்கின்றோம். தொட்டவுடன் துள்ளிக்குதிக்கும் தன்மை வாளைமீனுக்குண்டு. இதன் காரணமாகவே பரிபாடலும், கம்பராமாயணமும் வாளை குதித்துத் தென்னம்பாளையை அடைந்ததாகக் கூறின. வாளைமீன் அவ்வளவு உயரம் குதிக்கக்கூடியதன்று. வாளைமீன் குதித்து நெற்கூட்டின் மேலும் மனையிலும் அணையிலும் பிறழ்தலைச் சங்கநூல்கள் கூறியுள்ளன. வாளைமீன் பெரிய மீனாகையால் சிறு உள்ளான் குருவி பெரிய வாளையை உண்ணமுடியாது என்பதை ஓர் உவமையாகக் கூறியுள்ளனர். திரிகடுகத்தில் (7) ''வாளைமீன் உள்ளல் தலைப்படலும்'' என்று கூறப்பட்டுள்ளது. சங்கநூல்களில் பல பாடல்களில் நீர்நாய் காலையில் வாளைமீனை உணவாக உண்டதைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. வாளைமீனும் நீர்நாயும் ஒரே சூழலில் வாழ்வன. நீர்நாய் விடியற்காலையிலேயே உணவுக்காக மீன்களை வேட்டையாடும். தற்காலத்தில் நீர்நாயை அழித்துவிட்டமையால் இந்தக் காட்சியைக் காண்பதரிதாகிவிட்டது. ஆனால் கேரளத்தில் நீர்நாய்களை இன்றும் காணலாம். வாளைமீனை அறிவியலில் (Wallago Attu) என்றழைப்பர். மலையாளத்தில் 'வாளா' என்றழைப்பர். சிங்கள மொழியில் வாளை என்ற பெயர் சிறிது மாறி வழங்குகின்றது. வாளைமீனினத்தில் ஒருவகையைச் சிங்கள மொழியில் 'வாளைப்போத்தா' என்றழைக்கின்றனர். இது வாளைப்போத்து என்ற தமிழ்ப் பெயர் என்பதில் ஐயமில்லை. சிங்களமொழியில் வாளைப்போத்து என்றழைக்கும் மீனைத் தற்காலத்தில் தமிழ்நாட்டில் சொட்டை வாளை என்றழைப்பர். சங்கநூல்களில் வாளைப்போத்து என்ற பெயர் வருகின்றது. வாளைப்போத்து என்ற சங்கநூற்பெயர் சிங்களமொழியில் அழைக்கப்படும் வாளைப்போத்தா என்ற மீனையும் குறிக்கலாம். இந்த வாளைமீன் ஒன்றரை அடியே வளரும். இதை அறிவியலில் Ompok Bimaculatus என்றழைப்பர்.

———

# நிறைமொழி மாந்தர்

## [புலவர். பெ. முனியப்பன்]

### 1

### நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

—தரவு—

திருமிகுந்த தமிழ்மொழியின் தெளிவமைந்த இயல்பினையும்
அருமியற்கைப் பெரும்பாங்கின் அடிவழுவா முறையினையும்
மூச்செடுக்குங் கடுவொலியால் மூனைப்பழிந்து தளராமல்
கூச்சலற்ற இடல்பொலியால் குழந்தைக்கும் எளிதாகும்
மென்மையுடன், உளமுவக்கும் மிடுக்கான எடுப்பொலியும்
வன்மையுறப் பொருந்தியநம் வளர்தமிழின் வளமையினை
எண்ணியெண்ணிப் பிறமொழியை இணைத்தாய்ந்து தமிழுயர்வை
மன்பதைக்குப் பகர்ந்ததிரு மறைமலையாம் தமிழ்மலையே.

—தாழிசை—

௧. மறைமலைய டிகளென்னும் மலைபோலும் பெருந்திறலார்,
குறைமலிந்த மொழியென்றும் 'கொடு'வொலிதான் [இலையென்றும்
கறைபடுத்திச் சிதைத்ததனைக் கருத்துடனே கணித்தாய்ந்து
நிறைமொழியாம் தமிழுயர்வை நிலைசெய்த தனித்தலைவர்.

௨. ஓங்கியதன் தமிழ்மொழியில் உயர்ந்தபெரும் புலமையுடன்
ஆங்கிலத்தில் வடமொழியில் அகன்றாழ்ந்த அறிவுபெற்றே
தீங்கிழைக்கத் துணிந்தபிற மொழித்தீமை தனைவிலக்கி
நீங்காச்சீர்த் தமிழுயர்வை நிலைசெய்த தனித்தலைவர்.

௩. இழுமெனும்மென் ஒலிச்சிறப்பும் இழிவறியா இலக்கியமும்
வழுவமையா இலக்கணமும் முழுமையுறு பொருளியலும்
செழுமையுற்று வளர்ந்திருந்த சிறப்பெடுத்து முழங்கியதால்
அழுந்தியநம் தமிழுயர்வை அறியவைத்த தனித்தலைவர்.

—தனிச் சொல்—

எனவாங்கு

—சுரிதகம்—

ஓங்கிய முதலிரு உயர்தமிழ்க் கழகப்
பாங்கமை முனைவரைப் பசுந்தமிழ்ப் புலவரை
நிகர்த்தபே ரறிஞராய் நிலவிய சிறப்பினால்
தகவிலா நிலையினைத் தகர்த்தே வீழ்த்தியும்

இனித்தமிழ் மொழியினைக் கருத்துடன் கணித்தும்
தனித்தமிழ் திரும்பவும் தகவுறப் பேணினர்
மறைமலை யடிகளாம் மாதவர்
நிறைமொழி மாந்தராய் நெடும்புகழ் அடைந்தே.

---

## 2

### அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

—தரவு—

சிவனெனும்பேர் முழுமுதன்மை செறிந்திலங்கும் இறைவனையே
அவமறுக்கும் அருந்துணையாய் அகத்தமைத்த அடிகளவர்;
கடவுளியல் பறியாமல் உடலெடுத்தார் தமையெல்லாம்
மடமையினல் வழிபடும்வீண் மயக்கமுற்ற நிலையினையும்
சிறுதெய்வ இழிவணக்கச் சிறுமையையும் எடுத்துரைத்தே
திருவளர்க்கும் நெறியியம்பும் திருவினராய்த் திகழ்ந்தனரே.

—தாழிசை—

௧. உலகினிடை உலவுகின்ற பலமதங்கள் தனிலுள்ள
நலமெல்லாம் உளத்தமைத்து நயஞ்சால்தன் நடுநிலையால்
அவைகளின்நற் பயன்பாட்டை அறிந்தாய்ந்த அருந்திறத்தால்
சிவனியமே பகுத்தறிவுச் சமயமெனச் சிறந்ததுவே.

௨. மறைநூல்கள் எனும்பெயரில் மறநூலைச் சிலர்க்கென்றே
சிறைசெய்து மறைத்ததையும் செருக்குற்றுத் திரித்ததையும்
கவனித்துக் கருத்துடனே கணித்தாய்ந்த கடும்உழைப்பால்
சிவனியமே மறைநூல்கொள் சமயமெனச் சிறந்ததுவே.

௩. உயிரிரக்க அருளுளத்தால், உயர்வுமிக்க புலாலொழிப்பால்,
பயிர்களுமே துளிர்க்கவல்ல வழிபாட்டுப் பனுவலினல்
தவமுனிவர் முழுமுதல்நூல் தமிழினிலே உதவியதால்
சிவனியமே இணையில்லாச் சமயமெனச் சிறந்ததுவே.

### அம்போதரங்கம்

—பேரெண்—

குமரிநாட் டகத்தினர் குணமுற உதவிய
சமயமே சிவனியம் எனுமுரை படைத்தனை;
முறையிலாச் சடங்கினை முதல்வனை மறைத்திடும்
கறையுடைக் கதையினைக் கருத்தினல் உடைத்தனை.

—அளவெண்—

அச்சமில் இயல்பினுல் அரும்பணி புரிந்தனை
குச்சினர் உயர்ந்திட அறிவுளம் கொடுத்தனை
பகைத்தவர் நலமுறப் பரிவுடன் முயன்றனை
வகையுணர்ந் தெளியவர் வளமுறப் பயிற்றினை

—இடை யெண்—

இறையுணர்வை நிறைத்தோய் நீ
புரைசிலையைப் பொடித்தோய் நீ
அழகிறையை அறிந்தோய் நீ
உலகுயிரை உரைத்தோய் நீ
மெய்கண்டு மிளிர்ந்தோய் நீ
பொய்கொன்று புலர்ந்தோய் நீ
திருமுறைகள் தெளிந்தோய் நீ
அருநூல்கள் அளித்தோய் நீ

—சிற்றெண்—

சிவனுளாய் நீ சிறந்துளாய் நீ
தவமுளாய் நீ தவிப்பிலாய் நீ
அருளுளாய் நீ அழகுளாய் நீ
மருளிலாய் நீ மதியுளாய் நீ
பரிவுளாய் நீ பயமிலாய் நீ
குறியுளாய் நீ குணமுளாய் நீ
மொழியுளாய் நீ முதலுளாய் நீ
அழிவிலாய் நீ அகத்துளாய் நீ

—தனிச்சொல்—

எனவாங்கு

—சுரிதகம்—

நறும்பொருள் தனில்கொடுங் கசடினைக் கலத்தல்போல்
அருமதி இலாதவர் இணைத்தபொய் அழுக்கினை
நலமுறக் கழுவியும் நயம்பெறத் துலக்கியும்
உலகினில் சிவனியச் சமயமே உயர்ந்த(து)
எனுமொழி மறைமலை யடிகளால்
அனுத்திற னனையநன் கமைந்ததை வழுத்துவோம்.

---

# தவத்திரு மறைமலையடிகளார் தமிழாய்ந்த முறை

(சில குறிப்புகள்)

[இரா. இளங்குமரன்]

அடிகளார் தனிச் செந்தமிழ் நடையில் உரையும் பாட்டும் எழுதும் திறம்பெற்றார்; உரையாடும் திறமும் பெற்றார்; இத் திறங்கள் ஒருங்கே அடிகளார்க்குக் கை வந்தமை எதனால்? "விழுமிய தமிழ்ப் பழநூல்களில் கருத்து ஈர்ப்புண்டு நின்று பயின்ற பயிற்சியின்" விளைவேயாம்.

"எமது பதினைந்தாம் ஆண்டில் முறைப்படி துவங்கிய தமிழ்ப் பயிற்சியானது எமது இருபத்தோராம் ஆண்டில் பெரும் பாலும் நிரம்பிய தென்னலாம்; இருபத்தோராம் ஆண்டிற்குள் தொல்காப்பியம் திருக்குறள், திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் மூன்று நூல்களையும் முழுதும் நெட்டுருச் செய்து முடித்தேம். கலித்தொகை. பத்துப்பாட்டு. சிலப்பதிகாரம், நாலடியார் முதலிய நூல் களிற் பெரும்பகுதிகள் அங்ஙனமே நெட்டுருச் செய்து முடிக்கப் பட்டன. சிவஞான போதம் சிவஞான சித்தியார் என்னும் நூல்கள் இரண்டும் முழுமையும் நெட்டுருச் செய்து முடிக்கப்பட்டன. இவையேயன்றி நன்னூல் விருத்தி, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, யாப்பருங்கலக்காரிகை, இறையனார் அகப்பொருள் உரை, தண்டியலங்காரம் முதலான நூல்களும் முன்னமே முழுமையும் நெட்டுருச் செய்து முடிக்கப்பட்டனவாகும். கல்லாடம், சீவக சிந்தாமணி, பெரியபுராணம் என்னும் நூல்களின் சொற்சுவை பொருட்சுவைகளில் பெரிதும் மூழ்கியிருந்தும் அவற்றிலிருந் தெடுத்துப் பாடஞ் செய்த செய்யுட்கள் மிகுதியாயில்லை என்றாலும் அவற்றின் சொற்பொருணயங்கள் எமதுளத்தில் வேரூன்றி நின்றன. இங்ஙனமாக விழுமிய தமிழ்ப் பழநூல்களில் எமது கருத்து ஈர்ப்புண்டு நின்று பயின்ற பயிற்சியினாலேயே செய்யுளும் உரையும் தனிச் செந்தமிழ் நடையில் எழுதும் திறம் எமதிளமைப் பருவத் திலேயே எமக்கு வாய்ப்பதாயிற்று எழுதும் திறம் வாய்ப்பவே, அவைக் களங்களிற் பேசும் திறமும் அதனையொட்டி வாய்ப்பதாயிற்று" என்று அடிகளார், தமது திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை முகவுரையில் குறிப்பிடும் செய்தியால் அவர்கள் அருந்தமிழ் நூல்களை வரப்படுத்திக் கொண்ட திறம் புலப்படும்.

இனிப் பருகுவார் அன்ன ஆர்வத்தராய்ப் பைந்தமிழ் நூல்களைப் பயின்ற அடிகள், ஆய்வுத் துறைக்கும் வழிகாட்டி யாக விளங்கினார். அடியும் சொல்லும் எண்ணி ஆய்தலும்,

'இது தமிழ்ச் சொல்', 'இது வடசொல்', 'இது திசைச்சொல்', 'இந் நூலில் பிறசொல் விழுக்காடு இத்துணை' எனக் கணக்கிட்டு ஆய்வதும், அவர்தம் ஆய்வின் தனிமாண்புக் கூறுகளாகும்.

"பட்டினப்பாலை 301 அடிப்பாட்டு. இதில் நூற்றறுபத்து மூன்று அடிகள் வஞ்சியடிகள். நூற்று முப்பத்தெட்டடிகள் அகவலடிகள். சிறிதேறக் குறைய ஆயிரத்து முந்நூற்று அறுபத்தொன்பது சொற்கள்; இவற்றுள் 11 சொற்கள் வட சொற்களாம். அவை. மகம், அங்கி, ஆவுதி, பூதம், மது, பலி, பதாகை, அமரர், கங்கை, புண்ணியம், சமம் என்பனவாம், ஞமலி என்னும் ஒரு சொல் பூழி நாட்டிற்குரிய சொல். ஆகவே இப் பாட்டில் *நூற்றுக்கு ஒன்று விழுக்காடு பிறநாட்டுச் சொற்கள்,"

முல்லைப்பாட்டில் "இடைச் சொற்களையும் வேற்றுமை உருபுகளையும் நீக்கி எண்ணப்பட்ட சொற்கள் சிறிதேறக்குறைய ஐந்நூறு சொற்கள். இவற்றுள் முன்வந்த சொல்லே பின்னும் வருமாயின் பின்வந்த சொல் எண்ணப்படவில்லை. இவ்வைந்நூறு சொற்களுள் நேமி, கோவலர், படிவம், கண்டம், படம், கணம், சித்தித்து, விசயம், அஞ்சனம் என்னும் ஒன்பதும் வட சொற்கள். யவனர், மிலேச்சர் இரண்டும் திசைச் சொற்கள். ஆக இதனுள் காணப்பட்ட பிறமொழிச் சொற்கள் பதினொன்றேயாம். எனவே இப் பாட்டினுள் *நூற்றுக்கு இரண்டு விழுக்காடு பிறசொற்கள் புகுந்தன."

சிவஞான போதத்தில், "பன்னிரண்டு நூற்பாக்கள், பன்னிரண்டு நூற்பாக்களும் நாற்பதடிகளையுடையன; இந் நாற்பதடிகளிலும் இருநூற்றுப் பதினாறு சொற்களேயுள்ளன".

ஒவ்வொரு பாட்டின் சொற்களையும் எண்ணிப் பார்த்தும், சுண்டிப் பார்த்தும், மாற்றறிந்துரைக்கும் ஆய்வு நெறிச் செல்வர் அடிகளார் என்பது இம் முச்சான்றுகளால் போதரும்.

பெரும் பேராசிரியர் உ. வே. சாமிநாதையரவர்கள் வெளியிட்ட புறநானூற்றின் இரண்டாம் பதிப்பு (1923) படிகள் இரண்டும் அடிகளார் எழுதி வைத்த குறிப்புகளுடன் அவர்கள் பெயரால் அமைந்து விளங்கும் நூல் நிலயத்தின்கண் உள. அவற்றுள் ஒன்றில் 'மறைமலையடிகள் 25-4-1923 A.D.' எனக் கையொப்பமும்

---

* நூற்றுக்கு ஒன்று தானும் குறைந்துபடுதல் தவத்திரு அடிகளாரின் நன்மதிப்புப் பெற்ற மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் ஆய்வால் வெளிப்பட்டு வருகின்றது.

நாளும் இடப்பெற்றுள. ஒருபடியில் முதல் நூற்றுநான்கு பாடல்கள் முடியக் குறிப்புகள் எழுதியுள்ளனர். அந் நூலின் கடிதம், கையினால் எழுதும் எழுத்தைத் தாங்கிக் கொள்ளாது புறம்போக விடுதலையும் சிதைவுறுதலையும் கண்டு, வேறொரு படி வாங்கி அதில் முந்து குறித்த குறிப்புகளுள் ஒரோ ஒரு குறிப்பு மட்டும் ஒழிய எஞ்சியவெல்லாம் எடுத்தெழுதியுள்ளனர். 105 ஆம் பாடல் தொடங்கி 198ஆம் பாடல்காறும் அந் நூற்படியில் அருங்குறிப்புகளும், குறியீடுகளும், கோடுகளும் பொதுள வைக்கப் பெற்றுள. பின்னர்ப் பேரிடையீடுபட 365, 366, 367 ஆகிய மூன்று பாடல்களுக்கு மட்டும் குறிப்புகள் உள.

அடிகளார் ஆங்கில எழுத்தும், தமிழ் எழுத்தும் முத்துக் கோத்தாற் போன்றன. ஓவியம் போன்ற எழிலுடையது. 104 பாடல்களுக்கு எழுதிய குறிப்புகளைச் சிறிதும் மாற்றாமல் பெயர்த்தெழுதியும், குறியீடுகளும், கோடுகளும் ஆங்காங்கு விடாமற் பெய்தும் படியெடுத்துள்ளமை அவர்தம் செயல் மாண்புக்கு எடுத்துக் காட்டாவதுடன், ஆய்வு மாண்புக்கும் சான்றாம். அடிகளார் எழுதியுள்ள குறிப்புகள் தனி ஆய்வு நூலாதற்கு உரியது. எனினும் ஒன்றிரண்டு சுட்டுதல் இவண் தகும்.

புறநானூறு : வடாஅது பனிபடு நெடுவரை—6

—இது குமரிநாடு கடல் கொள்ளப்படுமுன் பாடப்பட்டது.

ஷை அடிக்குறிப்பு 3—4

—கீழ்கடல் குமரிநாடு கடல்கொண்டபோது உண்டாயது போலும்!

"ஆவு மானியற்"—9

—இப் பாட்டு பஃறுளியாறு கடல்கொள்ளுதற்கு முன் பாடப்பட்டது.

புறம் 12, 15 ஆம் பாடல்களையும் குமரிநாடு கடல் கொள்ளப்படுமுன் பாடிய பாட்டாகக் குறித்துள்ளார் அடிகள். இனிச் சில சொற்களைக் கொண்டு ஆய்ந்தும் புலவர் காலங் களைக் குறிக்கிறார் அடிகளார்.

புறம். 9. ஞமன்ன் —

"ஞகர முதன்மொழி தொல்காப்பியர் கூறாமையின் அவர் இவர்க்கு முற்பட்டவர் என்றுணர்க"

புறம். 365. சமம்—

சகர முதன்மொழி தொல்காப்பியர் சொல்லிற்றிலர்.
Composed in 3000.

புறம். 366. This was composed in 3000 B. C.

உவமைகளும் வரலாறுகளும் வருமிடந்தோறும் தவருது குறிப்பிடுகிருர் அடிகள். 'உவமை' என்பார். 'இயற்கை உவமை' என்பார். அரிய சொல்லோவியங்களாகத் தீட்டி உவமையைக் கற்பார் உளங்கொள வைக்கிருர்.

32. Apt Simile. 33. Vivid Simile.
50. Fine Simile. 55. High Spiritual Simile
19. Fine simile from huneters device.

கழகம், பாட்டு தொகை முதலாய நூல்களுக்குத் தனித் தனி மாநாடு நடத்திச் சொற்பொழிவு நூல்கள் வெளியிட்டுள்ளது. அவற்றுள் ஒன்று, 'புறநானூற்றுச் சொற்பொழிவுகள்' என்னும் நூல். அந் நூலை முற்றும் பார்த்துக் குறிப்பெழுதியுள்ளார் அடிகளார்.

ஏற்கத் தக்க கருத்துகளை 'ஆம்' என்றும் 'மெய்' என்றும் ஏற்றுப் போற்றுகிருர். ஏற்கத் தகாத கருத்துண்டாயின்—மறுக்கிருர்; விளக்கம் எழுதுகிருர். ஒருவகை வழுச் சொல்லாட்சி அக் கட்டுரைகளுள் சிலவற்றில் இருப்பதைத் திருத்தியுள்ளார். வெறுக்காத—வெருத (71) படைக்காத—படையாத (73) அழிக்காத—அழியாத (75) பிரிக்காத—பிரியாத 75) கொடுக்காத—கொடாத (93) படையெடுக்காது—படையெடாது (120)

இச் சொல்லை அறிதல் பயன் கூர்ந்ததாம்.

அடிகளாரின் புறநானூற்று ஆய்வுத் திறம் எங்கே கமழ்கின்றது? அவர்தம் அனைத்து நூல்களிலும் கமழ்வது உண்டெனினும் "முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்" என்னும் அருமை நூலில் முழுமையாகக் கமழ்கின்றது. புறநானூற்று மணிகள் முப்பத்து நான்கனை எழிலுறக் கோத்துச் சங்கச் சான்ருேர்க்குச் சூட்டிய வாடாமலர் மாலை முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர் என்னும் நூலாம். அடிகளார் நூல் விருப்பம் உணர்வோர், அவர் ஆழ்ந்து மேற்கொண்ட ஆய்வு விருப்பத்தை அறிதல் பெரும்பயனும்! நல்வழி காட்டியுமாம்!

---

# செய்திகளும் குறிப்புகளும்

## பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் நூற்றாண்டு விழாச் சொற்பொழிவுகள்

சென்னை நக்கீரர் கழகத்தினரால் இயங்கி வரும் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் சார்பில், பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் நூற்றாண்டு விழாச் சொற்பொழிவுகள், 7-3-76 இல் தொடங்கி, சென்னை மாநிலக் கல்லூரியில் நாடோறும் மாலை 6 மணியளவில் நடைபெற்று வருகின்றன. பல்வேறு பொருள்கள் பற்றிப் புலவர் பலர் சொற்பொழி வாற்றுகின்றனர்.

## தமிழில் தீர்ப்பு எழுதும் ஆணையைத் திரும்பப் பெறத் தீர்மானம்

வரும் தமிழ்ப் புத்தாண்டு நாள் முதல் தமிழக நீதிமன்றத் தீர்ப்புகள் தமிழில் எழுதப்பட வேண்டும் என முன்னாள் தமிழக அரசு பிறப்பித்த ஆணையைத் திரும்பப் பெறவேண்டும் என்று சென்னை உயர்நீதி மன்ற வழக்கறிஞர் சங்கம் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. 16-2-76 இல் நடைபெற்ற இச் சங்கக் கூட்டத்தில் திரு. என். ராமநாத ஐயர் என்பவர் இதற்கான தீர்மானத்தைக் கொண்டு வந்தார்.

இப்படி ஒரு சாரார் தீர்மானம் கொண்டு வந்தது வருந்தத் தக்கது.

## நூலாசிரியர் கண்டே காருக்குப் பரிசு

*1958-67* ஆண்டுகட் கிடையில் வெளிவந்த சிறந்த நூல்களை எழுதிய ஆசிரியர்கட்குப் பரிசு வழங்கு முகத்தான் மராத்திய நூலாசிரியர் திரு. விஷ்ணு சகராம் கண்டேகார் அவர்கள் எழுதிய 'யயாதி' என்னும் புதினம் மிகச் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அந் நூலின் ஆசிரியர் திரு. கண்டேகாருக்கு ஒரு நூறாயிரம் வெண் பொற்காசுகள் பரிசு வழங்கப்பட்டன. இப் பரிசளிப்பு விழா 26-2-76 இல் புது தில்லியில் நடைபெற்றது. வெண்கலத்தாலான கலைமகள் சிலையொன்று திரு. கண்டே காருக்கு வழங்கப்பட்டது.

இப் பரிசு 10 ஆண்டுகட்குமுன், திருமதி இராமா ஜெயின் என்பவரால் ஏற்படுத்தப்பட்டது. இந்திய மொழிகளில் சிறந்த இலக்கியப் படைப்பிற்கு இப் பரிசு வழங்கப்பட்டு வருகிறது. இப் பரிசு பெற்றவர்களுள் திரு. கண்டேகார் பதினோராம் ஆசிரியராவார்.

## இந்தியைப் பயன்படுத்த ஆய்வுக் குழுக்கள்

அமைச்சவைகளிலும் தனிப்பட்டார் நிறுவனங்களிலும் இந்தி மொழியை எப்படிப் பயன்படுத்துவது என்பது பற்றி ஆராய மாநில உள் துறை அமைச்சர் ஓம்மேத்தா அவர்கள் தலைமையில் மூன்று துணைக் குழுக்களை மைய அரசினர் அமைத்துள்ளனர். இவற்றுள் ஒரு குழு பாதுகாப்புத் துறையில் இந்தியைப் பயன்படுத்தும் முறைபற்றி ஆராயும். அது போலவே, முறையே இரண்டாவது மூன்றாவது குழுக்கள் ரயில்வே, செய்தித்தொடர்பு, வேளாண்மைத் துறைகளிலும்; நலத்துறை, குடும்ப நலத்திட்டம் ஆகிய துறைகளிலும் இந்தியைப் பயன்படுத்துவது பற்றி ஆராயும் என்று சொல்லப்படுகிறது.

## விண்வெளிப் பயணம் பற்றி அமெரிக்கர் கருத்து

"விண்வெளியில் பயணம் செய்யும் காலம் 1980 ஆம் ஆண்டிற்குப் பின் ஏற்படக் கூடும். அப்படிப்பட்ட நிலை வரும்போது, அந்த விண்வெளி ஊர்தியில் சென்னையில் இருக்கும் ஒருவர் 30 மணித்துளிகளில் அமெரிக்காவிலுள்ள லாஸ் ஏஞ்சல்சுக்குச் செல்லவும், ஓர் இரவிலேயே அங்கிருந்து திரும்பி வரவும் கூடும்", என்று 4-3-76 இல், அமெரிக்க விண்வெளி வீரரும் அப்பலோ-12 இல் விண்வெளியில் சென்று வந்தவருமான என். பீன் என்பார் சென்னையில் பேசியபோது குறிப்பிட்டார்.

## கண்ணகி கோயில் புதுப்பிக்கப்படும்

தமிழக எல்லையில் உள்ள இடுக்கி மாவட்டத்தில் அமைக்கப்பட்டுள்ள கண்ணகி கோயிலைப் புதுப்பிக்கக் கேரள அரசு 40 ஆயிரம் ரூபாய் ஒதுக்கியுள்ளதாகக் கேரள அரசின் அமைச்சர் வி. ஏச்சேரன் என்பார் அண்மையில் தெரிவித்தார். அமைச்சர் அவர்களும், இடுக்கி மாவட்ட ஆட்சித் தலைவரும், மற்றுமுள்ள அதிகாரிகளும் சென்ற கிழமையில் கண்ணகி கோயிலுக்கு அதன் திருப்பணி தொடர்பாகச் சென்று பார்வையிட்டனர்.

## 77 அடி நீள மீன்

77 அடி நீளம் 30 அடி அகலமுள்ள மிகப் பெரிய மீன் ஒன்றைக் கன்னியாகுமரிக் கடற்கரையில் மீனவர்கள் பிடித்தனர். இந்த மீனைக் கரைக்குக் கொண்டுவர நான்கு மணி நேரம் ஆயிற்று. இதனைக் கரை சேர்க்க மீன் துறை ஊழியர்களும் ஒத்துழைத்தனர். இம் மீனின் பெயர் 'அம்மினி உளுவை' என்று சொல்லப்படுகிறது.

## உலக இந்துமத மாநாடு

உலக இந்துமத மாநாடு 1-3-76 முதல் 6-3-76 முடியச் சென்னை தர்மபிரகாஷ் திருமண மண்டபத்தில் நடைபெற்றது. தவத்திரு காஞ்சி காமகோடி பீடம் ஜயேந்திர சரசுவதி சுவாமிகள் மாநாட்டைத் துவக்கிவைத்தார். இலங்கை, மலேசியா, பீஜித்தீவு, தென் ஆப்பிரிக்கா, இந்தோனேஷியா முதலிய நாடுகளிலிருந்து பலர் பேராளராக வந்திருந்தனர். சுவாமிகள் நாடோறும் இந்துமதத்தின் சிறப்புகளை விளக்கிப் பேசினர். இரண்டாம் நாள் நிகழ்ச்சியில் அவர் பேசியபோது, பண்டைக் காலந்தொட்டு சைவமும் வைணவமும் இந்து மதத்தின் இரு தூண்களாக நின்று நிலவி வருகிறதென்றும் சைவமும் வைணவமும் தோற்றத்தில் வெவ்வேறாகக் காணப் படினும் அடிப்படைக் கருத்தில் ஒருமைப் பாடுடையனவே என்றும் கூறினார். ஔவை நடராசன் அவர்கள் பேசியபோது தமிழ் இலக்கியங்களில் காணப்படும் சமயக் கருத்துகளையும், தமிழ்ப் பாடல்களில் காணப்படும் தெய்வத் தன்மைகள் பற்றியும் விளக்கமாகக் குறிப்பிட்டதோடு உலக சமயங்கள் பலவற்றின் கருத்துகளை விளக்கத் தமிழ்மொழி ஒரு சிறந்த கருவியாக உள்ளது என்றும் புத்தசமயக் கருத்துகளை விளக்க மணிமேகலையும், சைவ சமயத்தைப் பற்றிக் கூறச் சீவக சிந்தாமணியும், கிறித்தவ சமயத்தை விளக்கத் தேம்பாவணியும், இசுலாமிய சமயக் கருத்துகட்குச் சீறாப் புராணமும் தமிழில் அமைந்த இலக்கியங்களாகத் திகழ்கின்றன என்றும் கூறினர்.

உயர்நீதிமன்ற நடுவர் திரு. பி. எஸ். கைலாசம் அவர்கள் பேசுகையில் மணிமேகலை, சிலப்பதிகாரம் போன்ற தமிழ் இலக்கியங்களில் முருகனைப் பற்றியும் விட்ணுவைப் பற்றியும் மற்றும் பல கடவுள்கள் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன என்றார்.

## பார்வை இழப்பதைத் தடுக்கும் பயனுள்ள மரம்

மனிதர்களும் விலங்குகளும் கண் பார்வையை இழப்பதைத் தடுக்கும் பயனுள்ள மருந்துத் தன்மை அடங்கிய மரம் ஒன்று இருப்பதாகவும், அதன் காய்கள் சுவையானதாகவும் சமைத்து உண்ணத் தக்கவை என்றும் அண்மையில் ஓர் அரிய செய்தியை இந்தியத் தலைமை அமைச்சர் இந்திராகாந்தி அம்மையார் வெளியிட்டார். இந்த மரத்தைப் பயிரிடும் முறைகளைச் சுற்றறிக்கை மூலம் விரைவில் முதல்வர்களுக்கு அறிவிக்கப் போவதாகவும் அவர் கூறினார்.

## மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் நூறுவது ஆண்டுவிழா

டாக்டர். உ. வே. சாமிநாதையரின் ஆசிரியரான மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் நூறுவது ஆண்டு நினைவுவிழா மதுரைப் பல்கலைக் கழகச் சைவ சித்தாந்தத் தனிப் பேராசிரியர் திரு. க. வச்சிரவேல் முதலியார் தலைமையில் மதுரை தெற்காடிவீதி சைவசித்தாந்த சபையில் கொண்டாடப் பட்டது. பிள்ளையவர்களின் தமிழ்த் தொண்டும் சமயத் தொண்டும் கவிநயங்களும் பற்றி, திரு. தா. குருசாமிதேசிகர், திரு. தி. சு. கோவிந்தசுவாமி ஆகியவர்கள் சொற்பொழி வாற்றினர்.



மகாவித்துவான் பிள்ளையவர்களின் தந்தையார் மதுரைக் கோவிலில் 'மீன முத்திரைக் கணக்கர்' என்ற பதவியில் இருந்தவர் என்றும், பின்னர்த் திருசிரபுரம் சென்று வாழ்ந்ததால் அவ்வூர்ப் பெயரோடு சேர்த்து வழங்கப்பெற்றார் என்றும் விழாவிற் பேசப் பட்டன.

## திருச்சி தமிழ்ச் சங்கத்தில்

1976 மார்ச்சு 3 முதல் 7 முடிய ஐந்து நாட்கள் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் நூற்றாண்டுவிழா மிகவுஞ் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. விழாவிலே லால்குடி புலவர் ப. அரங்கசாமி அவர்கள் எழுதிய 'பிள்ளை அவர்கள் வரலாறு'ம், திருமுறைக்கலைஞர் வித்துவான் பட்டுசாமி ஓதுவாரால் தொகுத்தச்சிடப்பெற்ற பிள்ளை அவர்கள் இயற்றிய சில இன்சுவைப் பாடல்கள் அடங்கிய நூலும் வெளியிடப் பெற்றன. சங்க ஆட்சிக் குழுவினர்க்குத் தமிழ் நன் மக்கள் நன்றி செலுத்துங் கடப்பாடுடையர்.

### டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தின் 32-ஆவது ஆண்டுவிழா

நூல் நிலயத்தின் 32 ஆவது ஆண்டுவிழாவும் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் 101 ஆவது ஆண்டு நினைவு நாளும் டாக்டர் ஐயரவர்களின் 122 ஆவது பிறந்த நாளும் 8-3-1976 அன்று மாலை திருவான்மியூரில் ஐயரவர்கள் நூல் நிலயத்தில் நடைபெற்றன.

திரு. டாக்டர். தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் தலைமை வகித்தார். பிள்ளையவர்களுடைய வரலாருகிய Poets' Poet என்ற ஆங்கில நூலும் வாட்போக்கிக் கலம்பகம் (குறிப்புரையுடன்) என்னும் தமிழ் நூலும் வெளியிடப் பெற்றன. திரு. மு. அருணுசலம் அவர்கள் சிறப்புச் சொற்பொழிவாற்றினுர்.

மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணவராகிய சுப்பராயச் செட்டியார் என்னும் புலவரிடம் திரு. தெ. பொ. மீ. அவர்களின் தந்தையார் கல்விகற்றுப் புலமை பெற்றவர். ஆதலால் கல்வித்துறையில் மகாவித்துவான் அவர்களின் பேரர் என்ற முறையில் இருப்பவர் திரு. தெ. பொ. மீ. அவர்கள் என்பது குறிப்பிடப் பெற்றது.

பழைய சங்கநூல் முதலியவற்றுக்கு இக் காலத்தார் எழுதும் உரைகள் மிக்க சிறப்புடையனவாயில்லையென்று திரு. தெ. பொ. மீ. அவர்கள் குறிப்பிட்டார். பழைய நூல்கள் ஒன்றுக்கேனும் திரு. தெ. பொ. மீ. அவர்கள் உரையெழுதி வழிகாட்டினுல் இக்கால ஆசிரியர்கள் அவ்வுரையைப் பின்பற்றி உரையெழுத வாய்ப்பு உண்டாகும்.

———

## மதிப்புரை

### கம்பன் காவியத்தில் உயிரினங்கள்

**ஓர் அறிவியல் விளக்கம்**

*[ஆசிரியர் : பி. எல். சாமி. வெளியீடு : கம்பன் கழகம், அஞ்சல் பெட்டி எண் 24, புதுச்சேரி-605001, விலை ரூ. 6-00.]*

பல்வேறு சுவைகளின் களஞ்சியமாகத் திகழ்வது கம்பன் காவியம். அதனைப் படிப்போர் அவரவர் விரும்பிய வண்ணம் விரும்பிய சுவையினை அதனினின்று எடுத்துச் சுவைப்பர். நூலாசிரியர்களும் தத்தம் ஆற்றலுக் கேற்பப் பல்வேறு சுவைகளைத் தொகுத்துத் தருவர். அவ்வகையில் அறிவியல் துறையில் வல்லுநரான திரு. பி. எல். சாமி அவர்கள் கம்பன் காவியத்தில் உயிரினங்கள் பற்றித் தம் ஆராய்ச்சியினை தக்க சான்றுகளுடன் விளக்கியுள்ளார். ஆராய்ச்சிக் கண்கொண்டு இலக்கியங்களைப் பயில்வார்க்கு இந் நூல் ஒரு நல்விருந்தாகும்.

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

செந்தமிழ்ச் செல்வி பற்றிய உரிமை விளக்கம்–1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4 இல் கண்டுள்ளபடி

---

1. வெளியிடும் இடம் : 1/140, பிரகாசம்சாலை, சென்னை-1.

2. வெளியீட்டு முறை : திங்களிதழ்

3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்
 இனம் : இந்தியர்
 முகவரி : 2/140, பிரகாசம்சாலை, சென்னை-1.

4. வெளியீட்டாளர் பெயர் : திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிட்டெட்.
 இனம் : இந்தியர்
 முகவரி : 1/140, பிரகாசம்சாலை, சென்னை-1

5. ஆசிரியர் பெயர் : திரு. வ. சுப்பையா பிள்ளை
 இனம் : இந்தியர்
 முகவரி : 1/140, பிரகாசம்சாலை, சென்னை-1

6. இதழ் உரிமையாளர்கள், மூலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக்காட்டிற்கு மேற்பட்ட பங்குடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும் :

1. திரு. T. S. இராமலிங்கம் பிள்ளை, M. A., B. L.
 ஓய்வு பெற்ற சட்டத்துறைச் செயலாளர்,
 7, லேடி தேசிகாச்சாரி சாலை, ஆழ்வார்பேட்டை,
 மயிலாப்பூர், சென்னை-4.

2. திரு. வ. சுப்பையா பிள்ளை
 6, பவழக்காரத் தெரு, சென்னை-1.

3. திருமதி சு. மங்கையர்க்கரசி
 6, பவழக்காரத் தெரு, சென்னை-1.

4. திரு. R. M. S. கோபாலகிருஷ்ண பிள்ளை
 வணிகர், சாத்தான்குளம்,
 (திருநெல்வேலி மாவட்டம்)

5. திரு. M. K. சிவகாமிநாத பிள்ளை
 நான்காவது மாடி, புரோச் கட்டிடம்
 பிரின்செஸ் தெரு, பம்பாய்-2.

6. திரு. N. S. சுந்தரம், பார்-அட்-லா,
 134, தெற்கு இராச வீதி, தூத்துக்குடி.

7. திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார்
 வங்கியார், பாகனேரி, (இராமநாதபுரம் மாவட்டம்)

8. திருமதி கா. லட்சுமி ஆச்சி
 (திரு. காசிவிசுவநாதன் செட்டியார் மனைவி)
 பாகனேரி.

9. திரு. பெரி. அழ. மு. நா. நாராயணன் செட்டியார்
உரிமையாளர், பாரி அச்சகம், 127, பிரகாசம் சாலை, சென்னை-1.

10. திரு. மு. ஆறுமுகம்
15. பெருமாள் வடக்கு மாடத்தெரு,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2.

11. திருமதி க. வடிவழகி
(திரு. இரா. கலியாணசுந்தரம் மனைவி)
3, மேட்டுத் தெரு, சென்னை-1.

12. திருமதி மு. வயிரமணி
(திரு. இரா. முத்துக்குமாரசாமி மனைவி)
3, மேட்டுத் தெரு, சென்னை-1.

13. திருமதி பழ. மீனுட்சி ஆச்சி
(திரு. S. M. பழனியப்ப செட்டியார் மனைவி)
11, ரட்லண்ட் கேட், 2-வது தெரு,
சென்னை-6.

14. திரு. S. Ct. சிதம்பரம் செட்டியார்
162, அவினுசிசாலை, கோயமுத்தூர்-1.

15. திரு. A. Kn. அருணுசலம்
(திரு. கண்ணப்பசெட்டியார்புதல்வர்) நாயஞர் குளத்தெரு
நாட்டரசன் கோட்டை, (இராமநாதபுரம் மாவட்டம்)

16. திரு. T. S. ஜம்புலிங்கம் செட்டியார்
திருப்பூர் இல்லம், கோயமுத்தூர்.

17. திரு. Rm. K. Rm. இராமசாமி செட்டியார், வங்கியார்.
திட்டை, (தஞ்சை மாவட்டம்)

18. திரு. இரா. கலியாணசுந்தரம், பி.எஸ்ஸி.
3, மேட்டுத்தெரு, சென்னை-1.

19. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
3, மேட்டுத்தெரு, சென்னை-1.

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் எனது முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என வ. சுப்பையா பிள்ளையாகிய யான் உறுதியளிக்கிறேன்.

10—3—1976

(ஒப்பம்) வ. சுப்பையாபிள்ளை
பதிப்பாளர்

# வெளியார் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| Tamil Usage in Mass Media —Dr. Helga Anton | 12 | 00 |
| Grace in Saiva Siddhantha, Vedanta, Islam and Christianity —A. Frenz | 10 | 00 |
| A Comparative Study of Kamba Ramayanam and Tulasi Ramayanam —Dr. Shankar Raju Naidu | 25 | 00 |
| Mystic Treasure —Suddhanandha Barathi | 3 | 00 |
| தமிழ் நாவல்களில் மனித விமோசனம் —தி. பாக்கியமுத்து | 5 | 75 |
| இலக்கியமும் திறனாய்வும் —டாக்டர் கா. கைலாசபதி | 5 | 00 |
| கலிங்கத்துப்பரணி : ஒரு மதிப்பீடு —க. ப. அறவாணன் | 4 | 00 |
| சாத்தனார் —அ. மு. பரமசிவானந்தம் | 6 | 50 |
| பிற்காலச் சோழர் வரலாறு —சதாசிவப் பண்டாரத்தார் | 15 | 00 |
| மாதவி அரங்கேறினாள் —க. சி. கமலையா | 7 | 50 |
| தொல்காப்பிய மொழியியல் —டாக்டர். அகத்தியலிங்கம் | 10 | 00 |
| வள்ளுவர் வழியில் காந்தியம்— திரு. முருகுசுந்தரம், எம்.ஏ. | 1 | 50 |
| அனுபோக வைத்திய நவநீதம் (10 பாகங்கள்) | 57 | 50 |
| போகர் ஏழாயிரம் 1ம் ஆயிரம் | 8 | 60 |
| ,, 2ம் ,, | 8 | 60 |
| ,, 3ம் ,, | 8 | 60 |
| தேரையர் வாகடம் | 7 | 90 |
| இரசவாத சிந்தாமணி (2 பாகங்கள்) | 15 | 00 |
| செய்தி உலகம்— பழனி அரங்கசாமி | 10 | 00 |
| மந்திரமாலை— சுத்தானந்த பாரதியார் | 3 | 00 |
| சோதனையும் சாதனையும் I ,, | 4 | 50 |
| ,, II ,, | 4 | 50 |
| திருவருட் செல்வம் ,, | 3 | 00 |
| மனித இனங்கள் —தமிழாக்கம் : பூ சோமசுந்தரம் | 5 | 00 |
| உலகில் தமிழும் தமிழரும் —டாக்டர் பொன் கோதண்டராமன் | 4 | 00 |
| பால்மதி (கவிதை நாடகம்) —டாக்டர். ஏ. பெருமாள், M.A., Phd. | 6 | 00 |
| இன்பத் தமிழ் ஓசை —டாக்டர் மோ. வாசுகி அம்மையார் | 7 | 00 |
| சகல செல்வ யோகம் மிக்க பெருவாழ்வு தொகுப்பாசிரியர் : சு. அ. இராமசாமிப்புலவர் | 2 | 00 |

பதிவு எண் : M. 4899

# கழகப் புதிய வெளியீடுகள்

**வெப்பத்தின் கதை**

—மா. பா. குருசாமி எம். ஏ., டி ஜி. டி.

அறிவியல் நூல்களைச் சிறுவர்கள் எளிதில் படித்துப் பயன்பெறும் வகையில் நிலம், நீர், தீ, வளி, விண் பற்றிய செய்திகள் கதைப் போக்கில் எழுதப்பட்டுக் கழக வழி வெளி வந்திருப்பதை அன்பர்கள் அறிவர். அவ்வகையில் வெளி வந்துள்ள வெப்பத்தின் கதை என்னும் இச் சிறு நூலின்கண், வெப்பம் என்றால் என்ன? அதன் பயன்கள், தன்மைகள் யாவை என்பன சுருங்கச் சொல்லி விளங்க வைக்கப் பெற்றுள்ளன. ரூ. 3 00

**அருணகிரிநாத அடிகள் புராணம் (தண்டபாணியடிகள்)**

—தி. செ. முருகதாச அடிகள் உரை

இதில் அருணகிரிநாத அடிகளின் வரலாறு செய்யுள் நடையில் சுவைபடக் கூறப்பட்டுள்ளது. நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கம், முன்னுரை, சிறப்புப்பாயிரம் ஆகிய வற்றுடன் கூடிய சிறந்த புராணம். ரூ. 8 50

**நரம்பு மருத்துவம் (NEUROLOGY)**

டாக்டர் கா. லோகமுத்துக்கிருட்டிணன்,
M.S. (Gen.) M.Ch. (Neuro)., F.R.C.S. (Edin)., F.I.C.S.

இதன்கண் நரம்பு மண்டலம் பற்றிய நோய்களும் அவற்றைக் குணப்படுத்தும் முறைகளும் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன. அரிய படைப்பு; அழகிய பதிப்பு. ரூ. 15 00

**வாய், பல் மருத்துவம்**

டாக்டர் J. G. கண்ணப்பர், மற்றும் பல் மருத்துவர் மூவர் சேர்ந்தியற்றிய பயனுள்ள மருத்துவ நூல். அரசினர் பரிசினைப் பெற்ற நூல். ரூ. 10 00

**கண் மருத்துவம்**

—டாக்டர் செ. பா. பாலசுப்பிரமணியம்
B.Sc., M.B.,B.S., M.S.

கண்களின் அமைப்பு, கண்களுக்கு வரும் நோய்கள், அவற்றைத் தடுக்கும் வழிகள், மருத்துவ முறைகள் இன்னபிற சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறும் நூல். ரூ. 10 00

**பள்ளி மாணவர் பல்வகை நூல்கள்**

இதன்கண் பள்ளி மாணவர்களுக்கேற்ப இனிய எளிய நடையில் எழுதப்பட்டுள்ள 321 நூல்கள் 45 அட்டைப் பெட்டி களில் 4 தட்டுகள் கொண்ட அழகிய கண்ணாடிப் பேழையில் வைத்து விற்பனைக்கு வழங்கப்படுகின்றது. இப் பேழை பள்ளி நூலகங்கள்தோறும் இருக்கவேண்டிய பேழை.

குறைந்த விலை, ரூ. 700/-

## விரைவில் வெளிவரவிருக்கும் நூல்கள்

க. தகடூர் யாத்திரை விளக்கவுரை

—புலவர் இரா. இளங்குமரன்

உ. சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்

—புதுவை பி. எல். சாமி, பி. எஸ்ஸி.

அப்பர் அச்சகம் சென்னை-1.